கொலம்பியா புதிய வெளியீடு!



# V.V. சடகோபன் B.A.,

பாடிய

GE. 6301 { **ஆதாரம் நீ**
காஹரப்ரியா - 2 பாகங்கள்

முன் வெளியீடு :-

GE. 6287 { எந்தவேடுகொந்து
ஸரஸ்வதி மனோஹரி - 2 பாகங்கள்

GE 6125 { ராமபஜன செய்தால்
2 பாகங்கள்

GE. 6039 { ஸ்ரீ வேணுகோபாலா
காணவேணும்

# T.K. ராதாகிருஷ்ணன்

வேணுகானம்

GE. 6258 { **நன்னுப்ரோவ**
ராகம் - கல்யாணி - 2 பாகங்கள்



S. H. RAO

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதறாஸ். 2

மெஸர்ஸ். என். ராஜன் & கோ., 48-D, காவல்ச்சேரி ரோடு, பெங்களூர் கண்டோன்மெண்ட்.
மெஸர்ஸ். ... கார்ப்பொரேஷன், த. பெ. நெ. 35, 17 A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

# அழகின்

# இரு தலைமுறை

இருபது வருஷ வித்தியாசம்! இருந்தும், தாய் தன் பதினெட்டு வயது மகளைப்போல் யௌவனத்தோடும், சரும அழகுடனும் விளங்குகிறாள். காரணம் இந்த தாய் தன் தாயின் சொற்படி பியர்ஸ் சோப்பையும், சுத்த ஜலத்தையும் உபயோகித்து சரும அழகைக் காப்பாற்றிக் கொண்டதுதான். இந்த முறையைப் பின்பற்றி அழகான அவள் மகளும் தன் சருமத்தைக் காப்பாற்றுவதால், இருபது வருஷத்திற்குப் பின் தன் தாயின் சருமம் இன்று இருப்பதுபோல், அவள் சருமமும் அழகுடன் விளங்கும்.

நாற்பது ஆண்டுகளாக, இந்திய அழகிகளின் பிரிய சோப் பியர்ஸ்தான். அதன் மணமும், பட்டுபோன்ற மிருதுவான நுரையும் மற்ற சோப்புகளை விட உயர்ந்த ஸ்தானத்தில் அதை வைக்கின்றன.



# பியர்ஸ் சோப்

அழகின் அருமை

PS. 88-172.TM. A. & F. PEARS, ISLEWORTH, ENGLAND

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 1 | 1946 ஆகஸ்டு 4 | வியவ ஆடி 20





எண்ணும் எழுத்தும் கண்ணுக் கிணையாவை என்று ஔவை மூதாட்டியும் பொய்யா மொழிப் புலவரும் கூறினார்கள். எண்ணும் எழுத்தும் கற்பிக்கும் உபாத்திமார்களைக் "கண்ணைத் திறந்து வைப்பவர்கள்" என்று நமது பெரியோர்கள் சொன்னார்கள். அறிவுக் கண்ணைத் திறந்து வைப்பவர்கள் இறைவனுக்கே சமமானவர்கள் என்று கருதி "எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்" என்றும் அருளினார்கள்.

அப்படி யெல்லாம் நமது முன்னோர்களால் போற்றப் பட்ட ஆசிரியர்மார்கள் இன்று உண்ணும் உணவுக்கும் உடுக்கும் ஆடைக்கும் கஷ்டப்பட்டுக் கொண்டு நாட்டிலேயே எந்த உத்தியோகஸ்தர் அல்லது தொழிலாளர் இனத்தையும் விடச் சொற்ப சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தும் தங்கள் கடமையைச் சரிவர நிறைவேற்றிக்கொண்டு வருகிறார்கள்.



அப்படிக் கடமையில் கருத்துள்ளவர்கள், ஏதோ காங்கிரஸ் மந்திரிகள் வந்திருக்கிறார்களே, நம்முடைய குறைகளையும் சொல்லிக் கொள்ளலாம் என்று ஆவலோடு மந்திரிமார் காரியாலயங்களுக்குச் சென்ற சமயம், அவர்களைப் பிரதம மந்திரி நல்ல முறையில் வரவேற்று மரியாதையுடன் நடத்தவில்லை யென்பது வருந்தத் தக்க விஷயம். "பிரதம மந்திரி தங்களை அவமதித்து விட்டார்" என்ற எண்ணம் ஆசிரியர்களுக்கு ஏற்படும்படியாக நடந்து கொண்டது பெரிதும் வருந்தத் தக்க விஷயம். அவர்களுடைய கோரிக்கைகள் விஷயத்தில் யோசிக்க வேண்டி யிருந்தாலும் நல்ல வார்த்தையாவது சொல்லி அனுப்பாமல் அதிருப்தியோடும் ஆத்திரத்தோடும் திரும்பச் செய்தது பரிதபிக்கத் தக்க விஷயம்.

மந்திரிகளின் காரியாலயத்துக்கு முன்னால் உபாத்தியாயர்கள் பேட்டிக்கு நின்ற காட்சியை நமது இந்த இதழ் அட்டை மிக்க வருத்தத்துடன் தாங்கிக்கொண்டிருக்கிறது.

மேற்படி சம்பவத்தைப் பற்றிய "நமது விசேஷ நிருபர்" கட்டுரையையும் நமது புகைப் பட நிருபர் எடுத்த இன்னும் சில புகைப்படக் காட்சிகளையும் உட்பக்கங்களில் காணலாம்.



# வேர்குரு உபத்திரவம் ஒழிக

# ஸின்டால்

## பவுடர் உடனே குணமளிக்கும்




**ஸின்டெடிக் (இந்தியா) லிட்.**

12, ஸ்லேட்டர் ரோட்,
பம்பாய் 7 டெலிபோன் : நெ. 42650

லண்டன் ஆபீஸ் :
128/129, சீப்ஸைட், லண்டன் E. C. 2

கே. கே. பிள்ளை & கம்பெனி, ராயப்பேட்டை, சென்னை

E—PSY




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 1

# என்ன சேதி?

## மீண்டும் முட்டுக்கட்டை

பிரிட்டிஷ் மந்திரிகள் மூன்று பேரும் நல்ல ராகுகாலமாகப் பார்த்து இந்தியாவுக்கு வந்திருக்க வேண்டும். பாவம், அவர்கள் மூன்றரை மாதகாலம் இரவு பகலாகத் தூக்கம் இல்லாமலும் உடம்பைக் கெடுத்துக் கொண்டும் வகுத்த அரசியல் திட்டத்துக்கு என்னென்ன முட்டுக்கட்டையெல்லாம் ஏற்பட்டு வருகிறதென்று பாருங்கள்!

மேற்படி திட்டத்தைக் காங்கிரஸ் ஏற்றுக் கொள்ளுமா, ஏற்றுக் கொள்ளாதா என்பது பெரிதும் சந்தேகத்துக்கு இடமாயிருந்து, கடைசியில் ஒருவிதமாக நீண்டகால அரசியல் திட்டத்தைக் காங்கிரஸ் ஒப்புக் கொண்டது; இடைக்கால திட்டத்தை நிராகரித்தது.

ஏதோ இந்த மட்டும் நீண்டகாலத் திட்டமாவது பிழைத்ததே என்று எண்ணிக் கொண்டிருக்கும்போது, ஏற்கெனவே இரண்டையும் ஏககாலத்தில் ஏற்றுக் கொண்டிருந்த முஸ்லிம் லீக் இப்போது இரண்டையும் ஏககாலத்தில் நிராகரித்திருக்கிறது. நிராகரித்தது மாத்திரமல்லாமல் நேரடியான நடவடிக்கை எதுவோ ஆரம்பிக்கப் போவதாகவும் பயமுறுத்தி இருக்கிறது. அதற்குப் பூர்வாங்கமாக, பிரிட்டிஷ் சர்க்காரிடம் தாங்கள் இதுவரை பெற்ற பட்டங்களையெல்லாம் ராஜிநாமா செய்து விடுவதென்று தீர்மானித்து, அதே நிமிஷத்திலே - விநாடியிலே முஸ்லிம் லீக் பிரமுகர்கள் பலர் பட்டங்களை விட்டிருக்கிறார்கள்.

அந்நிய சர்க்கார் கொடுக்கும் அடிமைப் பட்டங்களின் போலித் தன்மையை, இவ்வளவு காலத்திற்குப் பிறகாவது முஸ்லிம் லீக் உணர்ந்து கொண்டது மகிழ்ச்சிக்குரியதே. நம்மைப் பொறுத்த வரையில் நாம் மற்றொரு விஷயத்துக்காகச் சந்தோஷப்படுகிறோம். முழ நீளமுள்ள பட்டப் பெயர்களைச் சேர்க்காமல் முஸ்லிம் பிரமுகர்களின் பெயர்களை இனிமேல் சுருக்கமாக எழுதலாம் அல்லவா? 'நவாப் ஜாதா லியாகத் அலிகான்' என்ற நீண்ட பெயரை வெறும் லியாகத் அலிகான் என்று எழுதுவதிலே எவ்வளவு சௌகரியம் இருக்கிறது, இந்தக் காகிதப் பஞ்ச காலத்திலே!

## காரணம் என்ன?

முஸ்லிம் லீக் நமக்குச் செய்திருக்கும் சௌகரியத்தை ஒருபுறம் நிறுத்தி வைத்துவிட்டு, அது திடீரென்று இம்மாதிரி முன்பு ஒப்புக் கொண்டதை மறுபடியும் நிராகரிப்பதற்குக் காரணம் என்னவென்பதையும் பார்ப்போம்.

முஸ்லிம் லீக் கௌன்ஸில் செய்திருக்கும் தீர்மானத்தையும் ஜனாப் ஜின்னா அந்தக் கௌன்ஸிலிலே செய்திருக்கும் ஆக்ரோஷமும் ஆவேசமும் கண்ணீரும் கம்பலையும் நிறைந்த பிரசங்கத்தையும் கவனித்தோமானால், வைஸிராய் தாம் சொன்னதுபோல இடைக்கால சர்க்காரை அமைக்கவில்லை என்பதுதான் காரணம் என்று ஏற்படுகிறது. அதை நினைக்கும்போது ஜனாப் ஜின்னாவுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. அந்த ஆத்திரத்திலே இந்தியா மந்திரியை 'முட்டாள்' 'மடையன்' என்றெல்லாம் 'சட்ட' ரீதியாகத் திட்டுகிறார்! இடைக்கால திட்டத்தைக் காங்கிரஸ் நிராகரித்தவுடனே ஜனாப் ஜின்னா இந்தியாவின் சர்வாதிகாரமும் தம்மிடமே வந்து விடும் என்று ஆசையோடு எதிர்பார்த்தார். வைஸ்ராய் வேவலும் பிரிட்டிஷ் மந்திரிகளும் அவ்வளவு புத்திசாலித்தனமான காரியத்தைச் செய்யவில்லை! நீண்ட காலத் திட்டத்தைக் காங்கிரஸ் ஒப்புக் கொண்டு விட்டபடியால், இரண்டு கட்சியும் சேர்ந்து சம்மதித்த இடைக்கால சர்க்காரைத்தான் அமைக்க வேண்டுமென்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். இதுதான் ஜனாப் ஜின்னாவுக்கு அவ்வளவு கோபத்தை உண்டாக்கிப் பிரிட்டிஷ் மந்திரிகளை 'முட்டாள்கள்' 'மோசக்காரர்கள்' என்று திட்டச் செய்தது. அதோடு, முஸ்லிம் லீக் நீண்ட காலத் திட்டத்தையும் சேர்த்து நிராகரிக்கும்படி செய்தது!

## அடிப்படைக் காரணம்

பிரிட்டிஷ் மந்திரிகளின் திட்டத்தை நிராகரித்ததோடும், பிரிட்டிஷ் பட்டங்களை விட்டதோடும் முஸ்லிம் லீக் நின்றுவிடவில்லை. நேரிடையான போராட்டம் ஆரம்பிக்கவும் நிர்மானித்து அதற்காக ஆகஸ்டு 16-உ-வையும் குறிப்பிட்டு இருக்கிறது.



ஸ்ரீ பாரதிதாஸன்

நல்லது, ஆரம்பிக்கட்டும். ஆனால் அப்படி முஸ்லிம் லீக் ஆரம்பிக்கும் போராட்டம் பிரிட்டிஷ் சர்க்காரை எதிர்த்து நடத்தும் போராட்டம் ஆகாது; ஹிந்துக்களை எதிர்த்து நடத்தும் போராட்டமும் ஆகாது; பாகிஸ்தானத்துக்காக நடத்தும் போராட்டமும் ஆகாது. முஸ்லிம்களில் ஒரு சாராரை எதிர்த்து மற்ற முஸ்லிம்கள் நடத்தும் போராட்டமாகவே இருக்கும்.

ஏனெனில், இடைக்கால சர்க்கார் ஏற்படாமற் போனதற்கும் சமரசப் பேச்செல்லாம் வெற்றி பெறாமல் முறிந்ததற்கும் அடிப்படையான காரணம் ஹிந்து - முஸ்லிம் சமூக வேற்றுமை அல்ல; பிரிட்டிஷ் சர்க்காரின் பிடிவாதமும் அல்ல; ஜனாப் ஜின்னா தம் தலைமையில் உள்ள லீக் முஸ்லிம்களைத் தவிர மற்றப்படி தேசிய முஸ்லிம்களோ, காங்கிரஸ் முஸ்லிம்களோ, நடுநிலைமை முஸ்லிம்களோ, யாரும் நிர்வாக சபைப் பதவிக்கு வரக்கூடாது என்று பிடிவாதம் பிடித்ததே யாகும். காங்கிரஸ் தனக்குக் கிடைக்கும் ஸ்தானங்களில் ஒன்றை தேசிய முஸ்லிமுக்குக் கொடுப்பதைக்கூட ஜனாப் ஜின்னாவினால் தாங்க முடியவில்லை. இதனாலேதான் இடைக்கால சர்க்கார் திட்டம் முறிந்தது. சமரசப் பேச்செல்லாம் முறிவதற்கு அடிப்படையான காரணம் இதுதான்.

ஆகவே, ஜனாப் ஜின்னா நடத்தப் போகும் நேரடிப் போராட்டத்தை முஸ்லிம் சமூகத்துக்குள்ளேயே நடக்கப் போகும் உட் கலகம் என்றுதான் சொல்ல வேண்டும். அதனால் ஏற்படும் விபரீதங்களுக்கெல்லாம் ஜனாப் ஜின்னாதான் பொறுப்பு ஏற்கவும் வேண்டும்.

## கவிஞருக்கு உபசாரம்

சமீபகாலமாகத் தமிழ் நாட்டிலே தோன்றியிருக்கும் ஒரு புது விழிப்பின் காரணமாகத் தமிழர்கள் செய்துவரும் பல நல்ல காரியங்களிலே, தமிழ்க் கவிஞர்களை அவர்கள் உயிருள்ளபோதே ஆதரித்துப் பாராட்டி கௌரவிப்பது என்பதும் ஒன்றாகும்.

அத்தகைய கவிஞர் பாராட்டுக் கூட்டம் ஒன்று சென்ற வாரம் ஞாயிற்றுக் கிழமையன்று சென்னையில் நிகழ்ந்திருக்கிறது. பிரபல தமிழ்க் கவிஞரும் பாரதியாரின் உத்தம சிஷ்யர்களில் ஒருவருமான ஸ்ரீ பாரதிதாஸனுக்கு அன்றைய தினம் இருபத்து நாலாயிரம் ரூபாய் அடங்கிய பிரம்மாண்டமான பணமுடிப்பு ஒன்றைத் தமிழ் மக்கள் அளித்திருக்கிறார்கள். அத்துடன், கவிஞர் மீது தாங்கள் வைத்திருக்கும் அன்புக்கும் மரியாதைக்கும் அறிகுறியாகப் பொன்னாலே செய்த ஆடையொன்றையும் போர்த்திக் கௌரவித்திருக்கிறார்கள்.

ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகளாகத் தமிழ்க் கவி பாடித் தமிழ் நாட்டுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் அருந்தொண்டு செய்து வரும் கவிஞர் பாரதிதாஸனுக்குப் பொன்னுடை மாத்திரம் என்ன, பொன்னாலேயே அபிஷேகம் செய்தாலும் தகும்.

மேற்படி பாராட்டு விழாவின் ஞாபகார்த்தமாக, * வெள்ளி வரலைப் பிரசுரம் ஒன்றையும் வெளியே கொண்டுவந்திருக்கிறார்கள். இதில், ஸ்ரீ சோமசுந்தர பாரதியார், வ. ரா., தேசிகவிநாயகம் பிள்ளை போன்ற பல பிரமுகர்கள் ஸ்ரீ பாரதிதாஸனைப் பற்றியும் அவருடைய கவிநயத்தைப் பற்றியும் அழகாக எழுதியிருக்கிறார்கள். பாரதிதாஸனைப் பற்றியும் அவருடைய வாழ்க்கையைப் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புபவர்களுக்கு இந்தப் பிரசுரம் உதவியாயிருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

ஸ்ரீ பாரதிதாஸனுக்கு 55 ஆண்டுகளாகின்றனவென்று இந்தப் புத்தகத்திலிருந்து தெரிய வருகிறது. பாரதிதாஸன் குறைந்த பட்சம் இன்னும் ஒரு ஐம்பத்தைந்து ஆண்டு வாழ்ந்து தமிழ் நாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் தமிழ் இலக்கியத்துக்கும் தொண்டு செய்வதுடன், தமிழ் மக்களின் இந்த மாதிரியான பல உபசாரங்களுக்கும் மரியாதைக்கும் பாத்திரமாவாரென்று எதிர்பார்க்கிறோம்.

* கவிஞர் மலர்; உரிமையாளர்: குயில் நிலையம், 581, பைகிராப்ட்ஸ் ரோட், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: ரூ. 2—8—0.

## நிகழ்ச்சிச் சித்திரம்

-உம்மன்

மது விலக்குத் திட்டம்
கொண்டு வருவது பற்றி
பொது ஜன அபிப்பிராயத்
துக்கும் மந்திரி சபை
யின் திட்டத்துக்கும்
அபார வித்தியாசம்
இருக்கிறது.

மது விலக்கு
பொது ஜனத் திட்டம்

மது விலக்கு
மந்திரிகள்
திட்டம்

இன்றைக்கு
முதற் பாடம்

உபாத்தியாயர்களும்
உயிர் வாழ வேண்டும்.

# அரோகரா பட்ஜெட்!



அரோகரா! அரோகரா! ஆற்றோடு போகிற அநேக கோடி ரூபாய்க்கு அரோகரா! சென்னை மாகாணத்து மக்களின் ஐம்பத்தேழு கோடி ரூபாய்க்கு அரோஹரா ஹரா!

சில நாளைக்கு முன்னால் பிரகாசம் கவர்ன்மெண்டாரின் புதிய வரவு செலவுத் திட்டத்தைப் பற்றிப் பத்திரிகைகளிலே முன்னறிவிப்பான சில செய்திகள் வந்தன. அவற்றிலே ஒரு செய்தி "இந்த வருஷத்திலே புது வரிகள் போடவில்லை!" என்று சொல்லிற்று. இதைச் சந்தோஷமாகத் தினசரிப் பத்திரிகைகள் பெரிய கொட்டை எழுத்துத் தலைப்புப் போட்டுப் பிரசுரித்தன.

அது உண்மைதான்; பிரகாசம் சர்க்காரின் புதிய வரவு செலவுத் திட்டம் புது வரி ஒன்றும் போடவில்லை என்பது உண்மைதான். பொது ஜனங்கள் சாப்பிடுகிற சோற்றில் மண்ணை வாரிப் போடவில்லை என்பதும் உண்மைதான். அது மட்டுமல்ல. சென்னை மாகாண வாசிகளையெல்லாம் தலை மொட்டை அடிக்கும்படி உத்தரவு போடவில்லையென்பதும் உண்மைதான். அவர்களைச் சுண்ணாம்புக் காளவாயில் போடச் சொல்லவில்லையென்பதும் உண்மைதான். இதற்காகவெல்லாம் நாம் சந்தோஷப்பட்டு நன்றி பாராட்ட வேண்டியதுதான்.

மற்றப்படி சந்தோஷப்படுவதற்கோ நன்றி செலுத்துவதற்கோ பிரதம மந்திரி பிரகாசத்தின் முதலாவது பயங்கர பட்ஜெட்டில் யாதொரு காரணத்தையும் காணவில்லை. துக்கப்படுவதற்கும் ஆத்திரப்படுவதற்கும் வேண்டிய காரணங்கள் இருக்கின்றன.

ஒரே ஒரு விஷயத்தை நமது மனதில் நன்றாகப் பதியச் செய்துகொள்ள வேணும். அதாவது சென்னை மாகாணத்தின் வரவும் செலவும் சென்ற ஏழு வருஷத்தில் எப்படி உயர்ந்து போயிருக்கின்றன என்பதுதான்.

1938-39ல் நடந்த காங்கிரஸ் சர்க்கார் ஆட்சியில் இந்த மாகாணத்தின் வரவு சுமார் ரூ. 19 கோடி; செலவு சுமார் ரூ. 19 கோடி.

1945-46ல் நடந்த அட்வைஸரி சர்க்கார் ஆட்சியில் சென்னை மாகாணத்தின் வருமானம் சுமார் ரூ. 48 கோடி; செலவு சுமார் $30\frac{1}{2}$ கோடி.

1946-47ல் பிரகாசம் சர்க்காரின் புதிய பட்ஜெட்டின்படி மாகாணத்தின் வரவு சுமார் ரூ. $48\frac{1}{2}$ கோடி; செலவு சுமார் ரூ. $57\frac{1}{2}$ கோடி!

அதாவது பழைய காங்கிரஸ் சர்க்காரைக் காட்டிலும் $38\frac{1}{2}$ கோடி ரூபாயும் சென்ற வருஷத்து அட்வைஸரி சர்க்காரைக் காட்டிலும் ரூ. 27 கோடியும் புதிய பிரகாசம் சர்க்கார் இந்த வருஷம் செலவு செய்யப் போகிறார்கள்!

சென்ற வருஷத்தைவிட அதிகமாகச் செலவாகும் 27 கோடி ரூபாயும் எதற்குச் செலவாகப் போகிற தென்றால், அதற்குப் பதில்:— அரோஹரா, அரோஹரா, அரோ அரோஹரா!

சென்ற வருஷத்தில் அட்வைஸரி சர்க்கார் ரூ. 48 கோடி வருமானத்தில் ரூ. $30\frac{1}{2}$ கோடி செலவு செய்தார்கள்; பாக்கி ரூ. $17\frac{1}{2}$ கோடியைக் கையிருப்பு நிதியில் போட்டார்கள். ஏற்கனவே கையிருப்பு நிதியில் இருந்த பணத்துடன் சேர்த்து அட்வைஸரி சர்க்கார் மொத்தம் $31\frac{1}{2}$ கோடி ரூபாய் பிரகாசம் சர்க்காரிடம் ஒப்புவித்தார்கள்.

பிரகாசம் சர்க்காரோ இந்த வருஷத்து வருமானம் $48\frac{1}{2}$ கோடி ரூபாயும் செலவுக்குப் போதாமல் மேற்படி கையிருப்பு நிதியிலிருந்து ரூ. 9 கோடி எடுத்துக் கொள்ளப் போகிறார்கள்!

இந்த மாதிரி பொறுப்பில்லாமல் பொது மக்களின் பணத்தை விரயம் செய்யும் அரசாங்க பட்ஜெட்டை நாம் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை!

* * *

சென்ற வருஷத்தைக் காட்டிலும் இந்த வருஷத்தில் 27 கோடி ரூபாய் அதிகம் செலவு செய்யப் போகிறார்களே,—இவ்வளவு பெரிய தொகையை,—1937-38ன் மொத்த வருமானத்தைக் காட்டிலும் ரூ. $38\frac{1}{2}$ கோடி அதிகமான தொகையை என்னமாய்த்தான் செலவிடப் போகிறார்கள் என்று கேட்டால், மொத்தத்தில் அது பெரிய மர்மமாகவும் அதிசயமாகவுந்தான் காணப்படுகிறது.

அரைப் பட்டினி கிடந்து பிராணனைக் கொடுத்துப் பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும் உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் உயர்த்தப் போகிறார்களா? இல்லை!

தலைக்கு மேல் வேலை வளர்ந்து இரவு பகல் உழைத்து உயிரை விடும் கிராம உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம் உயர்த்துகிறார்களா? இல்லை!

சொற்ப சம்பளம் வாங்கிக்கொண்டு பட்டணங்களில் பரிதாப வாழ்வு நடத்தும் கீழ்த்தர சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு ஏதேனும் சௌகரியம் உண்டா? அதுவும் இல்லை!

இதெல்லாம் போகட்டும். 1921-ம் ஆண்டிலிருந்து காங்கிரஸின் ஜீவாதாரத் திட்டமாயிருந்து வரும் மதுவிலக்கையாவது இந்த மாகாணம் முழுவதிலும் கொண்டு வந்து மகத்தான புகழைச் சம்பாதித்துக் கொள்ளப் போகிறார்களா? அதுவும் இல்லை!

வருஷம் 19 கோடி வருமானம் வந்த காலத்தில் ராஜாஜி இனி வரப் போகும் விற்பனை வரியை எதிர்பார்த்து நாலு ஜில்லாக்களில் மதுவிலக்குச் செய்தாரே, அதே நாலு ஜில்லாக்களிலேதான் இவர்களும் மதுவிலக்குக் கொண்டுவரப் போகிறார்கள்!!!

எப்படியிருக்கிறது கதை?

* * *

பிரகாசம் சர்க்காரின் பயங்கரச் செலவு பட்ஜெட்டில் அலசி ஆராய்ச்சி செய்வதற்கும் குறைகள் சொல்வதற்கும் எவ்வளவு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. அந்தப் பெரிய புராணத்தைச் சாவகாசமாகவே படிக்க வேண்டும்.

அந்தத் திட்டத்திலே மிக முக்கியமான குறைபாடு, மதுவிலக்கை நாலு ஜில்லாக்களில் மட்டும் கொண்டுவரப் போகிறார்கள் என்பதுதான்.

காங்கிரஸுக்குள்ளே அபிப்பிராய பேதத்துக்கு இதுவரையில் சிறிதும் இடமில்லாதிருந்த திட்டம் மதுவிலக்குத் திட்டமே யாகும்.

1921-ம் ஆண்டிலிருந்து ஒவ்வொரு காங்கிரஸ் மகாநாட்டிலும் ஒருமுகமாக நிறைவேற்றப்பட்ட தீர்மானம் மதுவிலக்குப் பற்றியதே யாகும்.

ஆயிரக் கணக்கிலும் பதினாயிரக் கணக்கிலும் தொண்டர்கள் மறியல் செய்தது, சிறை புகுந்தது எல்லாம் மதுவிலக்குத் திட்டத்துக்காகவே யாகும்.

“குற்றமென்று யாருமே
கூறுமித்தக் கள்ளினை
விற்கவிட்டுத் தீமையை
விளைப்பதென்ன விந்தையே?”

என்னும் நாமக்கல் கவிஞரின் மணிமொழிகளைப் பத்தாயிரம் மேடைகளிலிருந்து காங்கிரஸ் ஊழியர்கள் பத்து லட்சம் முறை கர்ஜனை செய்திருக்கிறார்கள்!

இந்தப் பிரகாசம் மந்திரி சபை வந்த பிறகு தமிழ் நாட்டிலே நடந்திருக்கும் ஒவ்வொரு காங்கிரஸ் மகாநாட்டிலும் பொது மக்களின் கூட்டத்திலும் உடனே மாகாணம் முழுவதிலும் பூரண மதுவிலக்குச் செய்ய வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

அப்படியெல்லாமிருந்தும் நாலே நாலு ஜில்லாக்களிலேதான் மதுவிலக்குக் கொண்டுவரப் பிரகாசம் சர்க்கார் திட்டம் போட்டிருக்கின்றனர்.

* * *

“இப்போது நாலு ஜில்லாக்களில் கொண்டு வருகிறோம். அடுத்த மூன்று வருஷத்திற்குள் மாகாணம் முழுவதிலும் கொண்டு வந்து விடுகிறோம்” என்று பிரதம மந்திரி பிரகாசம் சொல்லுகிறார்.

சாதாரணமாய்ப் பார்க்கும்போது, “இத்தனை நாள் பொறுத்த நாம் இன்னும் மூன்று வருஷம் பொறுக்கக் கூடாதா! இதற்கென்ன இவ்வளவு கூக்குரல்?” என்று தோன்றலாம்.

ஒத்திப் போடுவதற்கு உண்மையான நியாயமான காரணம் இருந்தால் அப்படி நாம் ஒப்புக்கொள்ளலாம்.

ஆனால், அப்படி மதுவிலக்கை ஒத்திப் போடுவதற்கு யாதொரு நியாயமான காரணமும் சொல்லப்படவில்லை. இந்த அகோரகரா பட்ஜெட்டின் போக்கைப் பார்க்கும் போது மூன்று வருஷத்தில் மதுவிலக்கு என்று சொல்வது வெறும் மோசடி என்று சந்தேகிக்கவும் இடம் தருகிறது.

இந்த மாகாணம் முழுவதிலும் பூரண மதுவிலக்கைக் கொண்டு வருவதற்கு இந்த வருஷத்தைப் போல் சௌகரியம் எப்போதும் ஏற்பட்டதில்லை; இனி மேலும் ஏற்படாது.

எப்படியென்றால், சென்ற வருஷத்தில் இந்த மாகாணச் செலவு ரூ. 30 கோடி; இந்த வருஷத்தில் வருமானம் ரூ. 48 கோடி. ஆகவே செலவைச்

சென்ற வருஷம் போல் வைத்துக் கொண்டால் அதிகப்படி பணம் ரூ. 18 கோடி இருக்கிறது. இதைத் தவிர ஏற்கெனவே கையிருப்பு நிதியில் ரூ. 31½ கோடி சேர்ந்திருக்கிறது.

ஆகவே கலால் வருமானம் ரூ. 13 கோடிக்கு இந்த வருஷத்திலே வெகு சுலபமாகத் தலை முழுகலாம்.

அப்படிச் சௌகரியமாயிருக்கும் போது செய்யாமல், கையிருப்புத் தொகையை யெல்லாம் அரோகரா செய்துவிட்டு, வரவுக்கு மேலே செலவினங்களை அளவின்றிப் பெருக்கிவிட்டு, "மூன்று வருஷத்துக்குள்ளே மதுவிலக்குச் செய்கிறேன்!" என்று சொன்னால், அது உண்மையான பேச்சு என்று நம்ப முடியுமா?

ஏதோ நாம் பதவியிலிருக்கிற வரையில் பணத்தை வாரி இறைத்து விட்டுப் பின்னால் வருகிறவர்களாலும் மதுவிலக்குச் செய்ய முடியாமல் பண்ணி வைக்க வேண்டும் என்ற நோக்கம் இருந்தால் எப்படி பட்ஜெட் தயார் செய்ய வேண்டுமோ, அந்த மாதிரி முறையில் இந்தப் பயங்கர பட்ஜெட் தயார் செய்யப்பட்டிருக்கிறது.

* * *

மேற்படி நிலைமை சென்னை மாகாணப் பொது மக்களுக்குப் பெரிதும் அதிருப்தியையும் ஆத்திரத்தையும் உண்டாக்கி யிருப்பதில் வியப்பில்லை.

அந்த அதிருப்தியையும் ஆத்திரத்தையும் காங்கிரஸ் எம். எல். ஏ.க்கள் சிலர் கட்சிக் கூட்டத்திலும் பொதுக் கூட்டத்திலும் வெளியிட்டிருக்கிறார்கள்.

அவர்களெல்லாம், ஸ்ரீ பிரகாசம் மந்திரி சபையைக் கவிழ்க்கும் துர் நோக்கத்துடன் இத்தகைய மதுவிலக்குப் பிரசாரத்தைத் தொடங்கி யிருப்பதாகப் பிரதம மந்திரியின் புதிய பக்தர்கள் முறையிடுகிறார்கள். ஏன், ஸ்ரீ பிரகாசம்காருவே ஸ்ரீ ஏ. வைத்திய நாதய்யரின் நிர்மான நோக்கத்தைப் பற்றித் தாம் சந்தேகிப்பதாகச் சொல்லியிருக்கிறார்.

பிரதம மந்திரி பிரகாசம் இது விஷயத்தில் பெரிய தவறு செய்கிறார் என்பதில் சந்தேகமில்லை.

பிரகாசம் காருவின் நன்மையைக் கோரும் உண்மையான சிநேகிதர்கள் பூரண மதுவிலக்கைப் பூரணமாகச் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறவர்கள்தான்.

மந்திரி சபையைக் கவிழ்க்கும் நோக்கம் அவர்களுக்கு இருந்தால் இப்போது பேசாமலிருந்துவிட்டு அப்புறம் நாட்டில் பிரசாரம் தொடங்குவார்கள்.

இப்போதே அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தை வற்புறுத்துவதினால் பிரகாசம் காருவுக்குத் தமது தவறைத் திருத்திக் கொள்ளச் சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொடுக்கிறார்கள். மாகாணம் முழுவதிலும் இந்த வருஷத்திலேயே மதுவிலக்கைக் கொண்டு வந்து நல்ல பெயர் வாங்கித் தமது மந்திரி சபையை நிலைநாட்டிக் கொள்ள உதவி செய்கிறார்கள்.

பிரகாசம்காருவின் நாலு ஜில்லா மதுவிலக்கே போதும் என்று சொல்லுகிறவர்கள்தான் அவரையும் அவருடைய மந்திரி சபையையும் கவிழ்க்கப் பார்க்கும் அவருடைய விரோதிகள்.

ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் முதலியவர்களின் யோசனையை நல்ல முறையில் ஒப்புக்கொண்டு பிரதம மந்திரி இந்த வருஷமே மாகாணம் முழுவதிலும் மதுவிலக்கைக் கொண்டு வந்தால் அவருடைய புகழும் பெருகும்; அவருடைய மந்திரி சபையும் நிலை பெறும்.

இல்லாவிடில் ஸ்ரீ பிரகாசம் காரு அபகீர்த்திக்கு ஆளாவது சர்வ நிச்சயம். அவருடைய மந்திரி சபைக்கு என்ன நேரும் என்பது பற்றி நாம் இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை.

# தேசத்திற்கே அவமானம்

[நமது விசேஷ நிருபர்]

சென்ற மாதம் 27-ந் தேதி சனிக்கிழமை மாலை மூன்று மணிக்குச் சென்னை மாகாண உபாத்தியாயர்களின் சரித்திரத்திலேயே ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாயிற்று. உபாத்தியாயர்கள் சுமார் 1,200 பேர் திருவல்லிக்கேணி சிங்காரச்சாரி தெருவிலுள்ள "டீச்சர்ஸ் கில்டு" ஆபீஸில் ஒன்று கூடினார்கள். பிரதம மந்திரிக்கும் கல்வி மந்திரிக்கும் தாங்கள் சமர்ப்பிக்கப் போகும் மனுவில் எல்லாரும் கை எழுத்திட்டனர். பிறகு மூன்று மூன்று பேராக அணிவகுத்து ஊர்வலமாகச் சர்க்கார் செக்ரடேரியேட் மாளிகைக்குச் சென்று பிரதம மந்திரியிடமும் கல்வி மந்திரியிடமும் தங்கள் குறையை நேரில் சொல்லுவது என்று புறப்பட்டார்கள். ஊர்வலத்தில் சுமார் 200 பெண்மணிகள் உற்சாகத்துடன் முன் வரிசையில் நின்றது நமது தமிழகத்தின் பழைய வீரப் பெண்மணிகளின் நினைவைக் கொண்டுவந்து என்னை சிலிர்த்து நிற்கச் செய்தது.

உபாத்தியாயர் சங்கத்தின் நீலக்கொடியை ஸ்ரீ பி. துரைக்கண்ணு முதலியார் தூக்கிப் பிடிக்க, கிறிஸ்துவக் காலேஜ் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் ஸ்ரீ குரிவில்லா ஜாக்கோப் ஊர்வலத்துக்குத் தலைமை வகிக்க, ஊர்வலம் ஆரம்பமாயிற்று. அரை மைல் தூரம் நீண்டிருந்த அந்த ஊர்வலத்தில் ஆங்காங்கே, "உயர்ந்த கல்வி வேண்டுமானால் உபாத்தியார்களுக்கு நல்ல சம்பளம் கொடுக்க வேண்டும்", "பொது ஜனங்களே! உபாத்தியாயர்களின் குறைகள் நீங்க ஒத்துழையுங்கள்"; "மந்திரிகளின் சம்பளம் 1,500 ரூபாய்; உபாத்தியாயர்களின் சம்பளம் 15 ரூபாய்"; "மந்திரிகளே! உங்களுடைய சம்பளங்களை உயர்த்திக் கொண்டீர்களே! ஏழை உபாத்தியாயர்களுக்கு ஒன்றுமில்லையா?" என்று எழுதிய போர்டுகளை உபாத்தியாயர்கள் உயரத் தூக்கிப் பிடித்திருந்தனர்.

ஊர்வலம் எவ்வித கோஷமுமின்றி அமைதியாகவும், அழகாகவும், கட்டுப்பாட்டுடனும் புறப்பட்டது. மூன்று மணிக்குப் புறப்பட்ட ஊர்வலம், பெரிய தெரு, பைக்கிராப்ட்ஸ் ரோடு, மெரினா ரஸ்தாவழியாக செக்ரடேரியேட் மாளிகைக்கு 3-45 மணிக்கு வந்து சேர்ந்தது. இவ்வளவு அமைதியாகவும் ஒழுங்காகவும் சென்ற பெரிய ஊர்வலத்தைச் சென்னைவாசிகள் இதற்குமுன் பார்த்திருக்கவே மாட்டார்கள்.

அப்படி வந்த ஆயிரத்துக்கு மேற்பட்ட உபாத்தியாயர்களும் ஸெயிண்ட் ஜார்ஜ் கோட்டையில் உள்ள கவர்ன்மெண்டு மாளிகையின் தெற்கு வாசலுக்கு எதிரே மந்திரிகளைப் பேட்டி காண ஆவலோடு காத்துக் கொண்டிருந்தனர். சுமார் கால்மணி நேரங் கழித்துக் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் அவர்கள் உபாத்தியாயர்கள் காத்துக் கொண்டிருந்த இடத்திற்கு வந்தார்.

கல்வி மந்திரி வந்தவுடன் கூட்டத்தில் சிறிது கலகலப்பு ஏற்பட்டது. சிலர் தங்கள் குறை தீர்ந்து விட்டது போலவே நினைத்

ஆயிரத்துக்கு மேற்பட்ட உபாத்தியாயர்களின் ஊர்வலம் இதுவரை கண்டும் கேட்டும் அறியாத காட்சி — மந்திரிகளின் காரியாலயம் உள்ள சர்க்கார் கோட்டை வாசலுக்கு வந்து சேர்கிறது.





பிரதம மந்திரி பிரகாசம் சர்க்கார் மாளிகையின் மாடியின் மேல் எப்போது பிரகாசிப்பார் என்று கொளுத்தும் வெய்யிலிலே உபாத்தியாயர்கள் காத்துக்கொண்டு நிற்கிறார்கள்.

---

னர் சந்தோஷப் பட்டனர். கல்வி மந்திரியும் "உங்களை எல்லாம் ஒரு மிக்கப் பார்ப்பதில் ரொம்ப சந்தோஷம்" என்று ஆரம்பித்தார். "எங்களைப் பார்த்து நீங்கள் சந்தோஷப் படுவதற்காக நாங்கள் வரவில்லை" என்று சொன்ன ஒரு உபாத்தியாயரின் தீனக் குரல் மந்திரியின் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. "எனக்கு வேறு வேலை இருக்கிறது. நான் கம்பன் மகாநாட்டுக்குப் போகவேண்டும். அதில் உங்களுக்கெல்லாம் அக்கறை இருக்குமென்று நினைக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் கல்வி மந்திரி சென்று விட்டார்.

கொளுத்திய வெய்யிலிலே உபாத்தியாயினிகளும் உபாத்தியாயர்களும் சுமார் அரை மணி நேரத்துக்கு மேலே காத்துக் கொண்டிருந்தனர். அரை மணி நேரத்துக்குப் பின்னர் பிரதம மந்திரி பிரகாசம் மாடிமீது பிரகாசித்தார். சில நிமிஷங்கள் மௌனமாகக் கூட்டத்தைப் பார்வையிட்டார். அந்தச் சமயத்தில் அண்ணாந்த தலையுடன் கழுத்து வலிக்க நின்ற சில வயோதிக உபாத்தியாயர்கள் "தயவு செய்து கொஞ்சம் கீழே வாருங்கள்" என்று கெஞ்சியும் பயனில்லை. பிரதம மந்திரி கீழே வர மறுதளித்து மாடி மீது இருந்தபடியே பேச ஆரம்பித்தார்.

"நீங்கள் இவ்வளவு பேர் ஊர்வலம் வந்தது எனக்கு வருத்தமாக இருக்கிறது. உங்களில் சில பிரதிநிதிகளை அனுப்பினால் போதாதா?" என்று பிரதம மந்திரி சொன்னதும், "நாங்கள் எங்கள் குறைகளைத் தீர்க்க எத்தனையோ மனுக்கள் போட்டோம். எங்கள் மகாநாட்டில் நிறைவேற்றிய தீர்மானங்களையும் அனுப்பினோம். அதற்கெல்லாம் பலனில்லாதபடியால்தான் வந்தோம்" என்று கூட்டத்திலிருந்து ஒரு கம்பீரமான குரல் எழுந்தது. அதற்குப் பிரதம மந்திரி பதிலளிக்கையில், "நீங்கள் இப்படி பக்கிங்காம் கர்னாடிக் மில் கூலிகளைப்போல் வந்திருக்க வேண்டியதில்லை. பெண்களையும் வற்புறுத்தி அழைத்துக் கொண்டு வந்திருக்க வேண்டியதில்லை. உங்கள் குறைகளைக் கவனித்துக் கொண்டுதானிருக்கிறோம். என்ன செய்வது, எப்படிச் செய்வது, எப்பொழுது செய்வது என்பது சர்க்காரைச் சார்ந்ததாகும்; உங்களைச் சார்ந்தது இல்லை" என்று கூறிவிட்டு உடனே அறைக்குள் சென்று விட்டார்.

இதுவரையிலும் ஏற்படாத ஒரு புது உணர்ச்சி உபாத்தியாயர்கள் மத்தியில் ஏற்பட்டு விட்டது. ஒவ்வொருவரும் தங்கள் மானம் பறிபோனதாக எண்ணி, "எங்களைப் பக்கிங்காம் கர்னாடிக் மில் கூலிகள் என்று சொன்னதைப் பிரதம மந்திரி வாபஸ் வாங்க வேண்டும்" என்று கூச்சலிட்டனர். — "எங்களை யாரும் வரும்படி வற்புறுத்

ில்லையே? நாங்களாகவேதான் வந்தோம்?" ன்று உபாத்தியாயினிகள் சொன்னார்கள். ரு உபாத்தியாயினி, "பக்கிங்காம் கர்னாடிக் ில் பெண் தொழிலாளி கேட்டதுபோல் றுயா மந்திரியே! எங்களிடம் வோட்டுக்குப் ிச்சை கேட்டாயே! அதை மறந்து ிப்பொழுது போலீஸை விட்டு அடிக்கச் ொல்லுகிறாயே, இது நியாயமா?' என்று ங்கள் கேட்போமா?" என்று சொன்ன டன், "அப்படி நாம் கேட்காததால்தான் ம்மைப் பார்த்துக் கூலிகள் என்று சொன் ர்" என்று ஒரு உபாத்தியாயர் இரைந்து த்தினார். இதைக் கேட்டதும் எல்லாரும் கையைத் தட்டினர்.

உபாத்தியாயர்கள் தங்கள் ஆத்திரத்தை று வழிகளிலும் காண்பித்துக் கொள்ள ரம்பித்து விட்டனர். "அவர் ஆலைத் தொழிலாளிகளுக்கு மானேஜராக இருக்க வேண்டியவர். மந்திரியாக இருப்பதற்கு யக்கு இல்லை" என்று ஒரு உபாத்தியாயர் சான்னார். "என் இரத்தம் கொதிக்கிறது. து மானம் மரியாதை எல்லாம் போய் ட்டது. பிரதம மந்திரி தாம் சொன்னதை பஸ் வாங்கும் வரையில் நாம் இந்த டத்தை விட்டு நகரவே கூடாது" என்று த்திரத்தோடு இன்னொரு உபாத்தியாயர் கர்ஜனை செய்தவுடன் எல்லா உபாத்தியாயர்களும் அதை ஒப்புக்கொண்டு அமைதியாக அங்கேயே உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்யத் தொடங்கினர்.

பிரதம மந்திரியை நேரில் பார்த்து உபாத்தியாயர்களின் ஆத்திரத்தைத் தெரிவித்து விட்டு வருவதாகச் சொல்லி ஒரு சிலர் உள்ளே சென்றார்கள்.

அப்பொழுது தரையில் உட்கார்ந்து சத்தியாக்கிரகம் செய்தவர்களின் சம்பாஷணையிலிருந்து, உபாத்தியாயர்களுக்கு வாழ்க்கையில் எவ்வளவு கஷ்டங்கள் இருந்தாலும் அவர்களுக்கு நகைச்சுவை இல்லாமற் போகவில்லை யென்று தெரிந்தது. ஒரு உபாத்தியாயர் தமது நண்பரைப் பார்த்து, "என் ஸார்! பிரதம மந்திரி தங்களிடம் படித்தவரோ?" என்று கேட்டபோது கூட்டத்தில் சிரிப்பு ஏற்பட்டது. மற்றொரு உபாத்தியாயர் "ஏன் ஸார்! நீங்கள் கொஞ்சம் 'எடிக்கட்டும், மேனரும்' சொல்லிக் கொடுக்கனேன். அவரை உங்களுடைய பள்ளிக்கூடத்துக்கு அனுப்புகிறேன்" என்று சொன்னபோது சிரிப்பு இன்னும் மேலே போய் விட்டது.

இந்த மாதிரிச் சிரிப்புச் சத்தத்தைக் கேட்டு மேலே செகரடேரியட் மாடியில்

ரதம மந்திரி தங்களை அவமதித்துப் பேசிய வார்த்தைகளை வாபஸ் பெற்றுக்கொள்ளும்வரைத் ரும்பிப் போவதில்லை யென்று உபாத்தியாயர்கள் தரையில் உட்கார்ந்துகொண்டிருக்கிறார்கள்.





பிரதம மந்திரியின் மரியாதைக் குறைவான பதிலைக் கேட்டு ஊர்வலத்தில் வந்திருந்த உபாத்தியாயினிமார்கள் "இப்படியும் உண்டா?" என்று அதிசயப்படுகிறார்கள்.

---

வேலை பார்த்துக் கொண்டிருந்த குமாஸ்தாக்கள் தங்கள் வேலைகளை விட்டு விட்டு வேடிக்கை பார்க்க வந்து விட்டனர். அவர்களைப் பார்த்து ஒரு உபாத்தியாயர் "நீங்கள் எல்லோரும் எங்களிடம் படித்தவர்கள். எங்களைப் பார்த்துப் பிரதம மந்திரி 'கூலிகள்' என்று சொன்னால் உங்களுக்கு அவமானமில்லையா?" என்று கேட்டார். குமாஸ்தாக்களுக்கு உண்மையிலேயே அவமானமாகத்தான் போயிருக்க வேண்டும். அவர்கள் பதில் பேசாமல் தலையைக் குனிந்து கொண்டு போய் விட்டார்கள்.

இந்தச் சமயத்தில் பிரதம மந்திரியைப் பார்க்கச் சென்ற உபாத்தியாயர்களும் உபாத்தியாயினிகளும் வந்து சேர்ந்தனர். ஓர் உபாத்தியாயினி சத்தியாக்கிரகம் செய்து கொண்டிருந்த உபாத்தியாயர்களைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார்:—"பிரதம மந்திரியை நாங்கள் பேட்டி கண்டு, 'எங்களைப் பக்கிங்காம் கர்னாடிக் மில் கூலிகள் என்று சொன்னது எங்களுடைய மனதைப் புண்படுத்தி விட்டது. அதைத் தாங்கள் வாபஸ் வாங்கினால்தான் நாங்கள் திரும்பிப் போவதாக இருக்கிறோம்' என்று சொன்னோம். அதற்கு அவர் 'உங்களுடைய நிலைமையைக் கண்டு வருந்தி அவ்விதம் பேசினேன். உங்களுடைய மனதைப் புண்படுத்தும் நோக்கம் எனக்கு இல்லை' என்று சொல்லி விட்டார்."

இப்படி அந்த உபாத்தியாயினி கூறியதும், "அதைப் பிரதம மந்திரியே நேரில் வந்து சொல்லட்டுமே" என்று கூட்டத்தினர் கோஷமிட்டனர். "போனது போகட்டும்; மேலே நடக்க வேண்டிய காரியத்தைப் பற்றி ஆலோசிப்போம். அப்படி மேலே எடுக்கப்போகும் நடவடிக்கையில் நீங்கள் எல்லாரும் ஒத்துழைக்க வேண்டும்" என்று தலைவர் கேட்டுக் கொண்டதற்கு "எதற்கும் தயார். எல்லாவற்றுக்கும் ஒத்துழைப்போம்" என்று அங்கே கூடியிருந்த அத்தனை உபாத்தியாயர்களும் பதில் சொன்னார்கள். பின்னர், கூட்டம் அமைதியாகக் கலைந்தது.

அன்று உபாத்தியாயர்கள் நடந்து கொண்ட பெருந்தன்மையையும் கண்யத்தையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும். உபாத்தியாயர்கள் தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்வதற்கு மேல் நடவடிக்கைகள், அதாவது வேலை நிறுத்தம் — சாத்வீக மறியல் — முதலியவற்றைக் கையாளுவதற்கு முன்பே அவர்களுடைய குறைகள் நீக்கப்பட வேண்டும். அப்படிச் செய்யவில்லை என்றால் அது மந்திரி சபைக்கு மட்டுமல்ல; தேசத்திற்கே அவமானம்.



# ஆடல் பாடல்



## கர்நாடகம்

ஒரே ஒரு ஊரில் ஸ்ரீ ஈ. கிருஷ்ணையர் என்று ஒருவர் இருந்தார். கடவுளின் புண்ணியத்தில் இன்றைக்கும் இருக்கிறார்; இன்னும் நெடுங்காலம் சௌக்யமாக இருக்கப் போகிறார்.

அந்த ஈ. கிருஷ்ணையர் ஆகப்பட்டவர் பதினைந்து வருஷத்துக்கு முன்னால் ஒரு சண்டையை ஆரம்பித்தார். அந்தச் சண்டைக்கு அவரே படைவீரர், படைத் தலைவர், பிரசார உத்தியோகஸ்தர் எல்லாமாக விளங்கினார்.

சண்டை எதைப்பற்றி யென்றால், அப்போது மேல் மூச்சு வாங்கிக்கொண்டிருந்த பரத நாட்டியக் கலையை ஆழக் குழிவெட்டிப் புதைக்க வேண்டுமா அல்லது அதற்குப் புத்துயிர் கொடுத்துச் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க வேண்டுமா என்பது பற்றித்தான்.

ஸ்ரீ ஈ. கிருஷ்ணையர் இரண்டாவது கட்சியைச் சேர்ந்தவர். "பரத நாட்டியமே தென்னிந்தியக் கலைகளின் உயிர், மூச்சுக் காற்று, இதயம், சிரம் எல்லாம். பரத நாட்டியத்தைப் புதைத்தால் மற்றச் சகல கலைகளையும் புதைத்தாற் போலத்தான்!" என்று பத்திரிகைகளில் எழுதிப் பிரசாரம் செய்து வந்தார். அதுமட்டுமல்ல சென்னை மியூஸிக் அகாடமியின் ஆரம்பத்திலிருந்து சுமார் பத்து வருஷகாலம் ஸ்ரீ ஈ. கிருஷ்ணையர் அந்த வித்வத் சபையின் காரியதரிசி பதவி வகித்தார். அந்தப் பதவி வகித்துக்கொண்டு பிரதி வருஷம் அகாடமி வருஷாந்தர விழாவின்போது பரதநாட்டியக் கச்சேரிகளை ஏற்படுத்தினார். இதைக் குறித்து அகாடமியின் மற்ற அங்கத்தினர் சிலர் "போச்சு! போச்சு! அகாடமியின் கௌரவமே போச்சு!" என்று இரைச்சல் போட்டார்கள். "போகவில்லை! போகவில்லை! அகாடமியின் கௌரவம் போகவே இல்லை!!" என்று ஸ்ரீ ஈ. கிருஷ்ணையர் இன்னும் அதிகமாக இரைச்சல் போட்டார்.

இப்படியெல்லாம் பதினைந்து வருஷத்துக்கு முன்னால் நடந்தது.

இப்போதைய நிலைமை என்னவென்றால், பள்ளிக் கூடங்களிலே படிக்கும் பெண் குழந்தைகளுக்குப் பரத நாட்டியத்தை ஒரு பாடமாக ஏற்படுத்துவதென்று சென்னை சர்வ கலாசாலையாரே தீர்மானித்திருக்கிறார்கள். தீர்மானித்ததோடு நில்லாமல் பரத நாட்டியப் பாடதிட்டம் ஒன்றை வகுக்கும்படியாக மேற்படி ஸ்ரீ ஈ. கிருஷ்ணையரையே கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

சென்னைச் சர்வ கலாசாலை இதுவரை செய்திருக்கும் சில புத்திசாலித்தனமான காரியங்களில் இது முக்கியமான ஒரு காரியம் என்று சொல்லவேண்டும். இனிமேல் நமது ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் கூட, 'மெட்ராஸ் யுனிவர்ஸிடி'க்குச் சாபம் கொடுக்க மாட்டார்.

சென்னை யுனிவர்ஸிடிக்குப் பெரிய வெற்றி; ஸ்ரீ கிருஷ்ணையருக்கு அதைக் காட்டிலும் பெரிய வெற்றி!

• • •

சென்ற ஜூலை 21உ சென்னை மியூஸியம் தியேட்டரில் குமாரி கமலாவின் பரத நாட்டியக் கச்சேரி நடந்த சமயம் ஸ்ரீ ஈ. கிருஷ்ணையர் அதைப் பார்த்து ஒரே ஆனந்தத்தில் மூழ்கியிருந்ததைக் கவனித்தபோது மேற்கண்ட விஷயங்கள் எல்லாம் என்னுடைய நினைவுக்கு வந்தன.

"கல்கி"யின் முதல் ஆண்டு தீபாவளி மலரில் "பேபி கமலாவின் நடனத் தோற்றங்கள்" என்ற தலைப்பில் வந்த படங்கள் நேயர்கள் சிலருக்கு நினைவிருக்கலாம். அந்த பேபி கமலா வயதிலும் கலைத் திறனிலும் நாளுக்கு நாள் அபிவிருத்தி யடைந்து, வெள்ளித் திரையிலும் நடன அரங்கத்திலும் பெயரும் புகழும் பெற்று வந்திருக்கிறாள். குமாரி கமலாவின் கலைத் திறமையைப் பற்றி அடிக்கடி நான் கேள்விப்பட்டிருந்த போதிலும், பூரண பரத நாட்டியக் கச்சேரியைச் சமீபத்திலேதான் முழுதும் பார்க்க நேர்ந்தது. புரசவாக்கம் சங்கீத சபையின் ஆதரவில் மியூஸியம் தியேட்டரில் மேற்படி கச்சேரி நடந்தது.

குமாரி கமலா வழுவூர் ராமய்யா நட்டுவனாரின் கீழ்ப் பயிற்சி பெறும் விஷயம் அறிந்தபோதே, கலையின் தரம் மிகவும் உயர்வா

யிருக்கு மென்று எதிர்பார்த்தேன். எதிர்பார்த்தது வீண் போகவில்லை.



கர்நாடக சங்கீதத்தில் ஒவ்வொரு பெரிய வித்வானும் ஒரு பாணியை ஏற்படுத்திக் கொள்வது போல், பரத நாட்டியத்திலும் சிறந்த நடன ஆசிரியர்கள் தனித் தனி பாணியை அமைத்துக் கொள்கிறார்கள். வழுவூர் ராமய்யாப் பிள்ளையின் பாணியில் லயச் சிறப்போடு கூடிய ஜதிகளின் அமைப்பும், 'உள்ளத்தின் உணர்ச்சிகளை முகத்தில் கொண்டு வரும் அபிநயத்தையும், பழைய காலத்து அபூர்வ சிற்ப வடிவங்களை நினைவூட்டும் தோற்றங்களின் நிலையும் பொருத்தமாகச் சேர்த்திருப்பதால் அவருடைய பாணி தற்காலத்துக் கல்வியறிவு படைத்த ரஸிகர்களின் மனதைப் பெரிதும் கவர்ந்து விடுகிறது.

அதோடு, தற்கால வாழ்க்கைக் குரிய நவீன கருத்துக்களை நடனத்தில் அமைக்கும் திறமையும் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளை பெற்றிருக்கிறார்.

நடன ஆசிரியரின் மேற்படி திறமைகள் எல்லாம், அன்று குமாரி கமலாவின் நடனக் கச்சேரியில் வெகு நன்றாகச் சோபித்தன.

குமாரி கமலா அன்று ஆடிய வர்ணம் புது முறையில் ஆழ்வார் பாசுரங்களைக் கொண்டு அமைக்கப் பட்டது. பக்தி பாவத்தை விஷயமாகக் கொண்டது.

"பச்சைமா மலைபோல்"- "வண்டினம் முரலும்" "ஊரிலேன் காணியில்லை" "தாயர் தந்தைய ரென்றும்" ஆகிய நாலு பாசுரங்களை, — தமிழின்பமும் உணர்ச்சிப் பெருக்கும் ததும்பும் பாசுரங்களை, — கல்யாணி, தோடி, கருட்டி, மோகனம் ஆகிய நாலு ராகங்களிலே கோத்து ராகமாலிகை வர்ணமாக அமைக்கப் பட்டிருந்தது.

ஒவ்வொரு பாசுரத்தையும் பாடும்போது அதற்குரிய அபிநயம், பாடி முடித்ததும் ஜதி நடனமும்— இப்படிப் பொருத்தமாக அமைத்திருந்தபடியால் பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமலும் கேட்கக் கேட்க அலுக்காமலும்" இருந்ததோடு நேரம் எவ்வளவு ஆயிற்று என்னும் எண்ணமே யாருக்கும் ஏற்படவில்லை.

கடைசியாக, மோகன ராகத்தில் ஸ்வர ஜதியைப் பிரமாதமான வேலைப் பாடுகளுடன் ஆடி விட்டுக் குமாரி கமலா உள்ளே சென்ற போதுதான் சபையோர் இந்த உலகத்துக்கு வந்தார்கள். இந்த உலகத்துக்கு வந்து விட்டதைத் தெரிந்துகொண்டதற்கு அடையாளமாகப் பலமான கரகோஷம் செய்து தீர்த்து விட்டார்கள்.

அன்று கச்சேரியில் குறிப்பிட வேண்டிய மற்றொரு விசேஷ அம்சம், பாரதியாரின் முரசுப் பாட்டுக்கு அபிநயமும் ஜதியும் சேர்த்து அமைத்திருந்த நடனத்தைக் குமாரி கமலா ஆடியதாகும்.

"வெற்றி எட்டுத் திக்கும் எட்டக்
கொட்டு முரசே!"

என்ற பாட்டை அதற்குப் பொருத்தமான தீர்க்க கம்பீர மெட்டில் அமைத்து இரண்டு இளம் பிள்ளைகள் பாட, அதற்கேற்பக் குமாரி கமலா முரசு கொட்டுவது போன்ற அபிநயத்துடன் ஆடிக்கொண்டு மேடைக்கு வந்த காட்சி சபையோர்க்கு ரோமச் சிலிர்ப்பை உண்டாக்குவதாயிருந்தது. "தோல்வி மனப்பான்மை" என்பதாக இந்த நாளில் ஒரு சொற்றொடர் வழங்குகிறதல்லவா? இந்த நடனத்தை ஒரு தடவை பார்த்து விட்டால் மேற்படி 'தோல்வி மனப்பான்மை அருகிலேயே வராது' என்று நிச்சயம் சொல்லலாம்.

"ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே" பாட்டுக்கு ஸ்ரீ ராமய்யாப் பிள்ளை அமைத்திருக்கும் நடன சிருஷ்டியைப்போல், இந்த முரசுப் பாட்டிற்கும் ஓர் அற்புத நடன சிருஷ்டியைச் செய்திருக்கிறார்.

குமாரி கமலாவுக்கு இயற்கையிலேயே உடன் பிறந்த செல்வமாக நடன கலை அமைந்திருக்கிறது. அந்தக் கலைத் திறமையானது நடன ஆசிரியர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளையின் சிக்ஷையினால் பட்டை போட்ட வைரத்தைப் போல் பிரகாசிக்கின்றது.

கமலாவின் கலைச்செல்வம் நாளுக்குநாள் வளர்ந்தோங்கும் என்று எதிர்பார்க்கலாம்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஆர். எஸ். எஸ். மணியன், கும்மிடிபூண்டி.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 149. உள்ளமும் குவிந்தது !

இலங்கைத் தீவுக்குக் கொஞ்சம் போகலாம் நாம்.

ஒரு அழகான மகா மண்டபம். அதில் கொலு வீற்றிருக்கிறான் ராவணன். அரக்கர் முதலான பற்பல இனத்தாருக்கும் தலைவராய் உள்ளவர்கள் பொன் முடி தரித்தவர்களாய் ராவணனது பாதத்தில் போட்டி போட்டு வணங்குகிறார்கள். அந்த முடிகள் உராய்வதால் அவனது கழல்களிலுள்ள மாணிக்கங்கள் தெறித்து விழுகின்றன.

ஆய்வரும் பெருவலி
அரக்கர் ஆதியோர்

நாயகர் நளிர்மணி
மகுடம் நண்ணலால்,

தேய்வுறத் தேய்வுறப்
பெயருஞ் செஞ்சுடர்

ஆய்மணிப் பொலன்கழல்
அடிநின்(று) ஆர்ப்பவே.

[ஆய்வரும் பெருவலி: நாளாக நாளாக சக்தியும் புகழும் வளர்ந்து வரும்; அரக்கர்கள், அவுணர் முதலியவர்களுடைய தலைவர்கள்; நளிர் மணி மகுடம் நண்ணலால்: நயமான முத்துக்கள் பதித்த முடிகள் உராயுதலால்; நளிர்: இதமான ஒளி யுள்ள; தேய்வுறத் தேய்வுற: கழல்களின் பொற்கட்டுத் தேயத் தேய; பெயரும் செஞ்சுடர் ஆய்மணி: தெறித்து விழுவதான மாணிக்கங்களை அழுத்திய; பொலன் கழல்: அழகான வீரக் கழல்கள் இரண்டும்; அடி நின்று ஆர்ப்பவே: பாதங்களில் கிடந்து சப்திக்கின்றன — முடி மன்னர் வணங்குவதால் ஏற்படும் தொந்தரவு காரணமாகப் பாதங்களைப் பின் வாங்கியிருக்க நேருகிறது.]

ராவணனை முதல் முதலாகப் பார்க்கிறோம். அவனுடைய சாம்ராஜ்யத்தையும், பராக்கிரமத்தையும் அரசர்கள் அவனுக்கு முன்னால் வணங்குவதைக் கொண்டு காட்டுகிறார் கவிஞர்.

எங்கெங்கெல்லாமோ இருந்து அரசர்கள் வந்து, 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி போட்டுக் கட்டவேண்டிய கப்பங்களை ராவணன் முன்னிலையில் குவிக்கிறார்கள். அப்படிக் குவித்த பொன் குவியல்கள் மலை மலையாகக் கிடக்கின்றன. அவைகளைப் போல வேறு குவியல்களையும் பார்க்கிறோம்.

மூவகை உலகினும்
முதல்வர், முந்தினர்

ஓவலர் உதவிய
நிறையின் ஓங்கல்போல்,—

தேவரும் அவுணரும்
திசைதி சைநின்று

தூவிய குலமலர்க்
குப்பை அன்னவே.

[மூவகை உலகினும் முதல்வர்: தலைமையாய் உள்ள அரசர்கள் எத்தனை எத்தனையோ பேர் வந்திருந்தார்கள். அவர்களுடைய தொகையைப் பார்த்தால் இந்த உலகத்து அரசர்கள் மாத்திரம் அல்ல, மேல் உலகம், கீழ் உலகம், இந்த உலகம் ஆகிய மூன்று உலகங்களிலிருந்தும் வந்திருக்கிறார்களோ என்று சொல்லத் தோன்றும்; முந்தினர் ஓவலர் உதவிய: போட்டி போட்டு ஓயாதபடி வந்து செலுத்திய; நிறையின் ஓங்கல் போல்: நிறைக் குவியல்களான மலை, அவைகளைப் போல்; தேவரும் அவுணரும்: கல்வியிலும் மதிப்பிலும் உயர்ந்த அந்தணருக்கு உரியவர்கள்; திசை திசை நின்று: நாலா திசைகளிலும் நின்று; தூவிய நறு மலர்க் குப்பை: தூய வாசனை பொருந்திய மலர்க் குப்பை; அன்னவே: நெருங்கவே.]

அரசர்களென்ன, அந்தஸ்து உள்ளவர்கள் என்ன, எத்தனை எத்தனையோ தரமான மக்கள் ராவணனைச் சேவிக்க வருகிறார்கள்.

அவரவர்களுக்குத் தக்கபடி நிற்பதற்குச் சிம்மாசனத்தைச் சுற்றித் துறைகள் வகுத்திருக்கிறார்கள். அந்தத் துறைகளில் அந்தப் பிரமுகர்கள் மெள்ள நடந்து சுற்றி வருகிறார்கள். இன்ன நேரத்தில் இன்ன கட்டளை பிறப்பிப்பான் என்பது தெரிய முடியாததால் சதா ராவணன் முகத்தைப் பார்த்த வண்ணமாய் நடந்து செல்லுகிறார்கள்.

# படித்துப் பார்!

[ஆசிரியர் : நாமக்கல் கவிஞர்; பிரசுரம் : தமிழ்ப்பண்ணை, தியாகராய நகர், சென்னை ; விலை : மலிவுப் பதிப்பு ரூ. 3—8—0 ; உயர்ந்த பதிப்பு ரூ. 6—0—0.]

“வசன கவிதையைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?” என்று ஒரு சமயம் ஒரு நண்பர் என்னைக் கேட்டார்.

“அதைப் பற்றி எனக்கு அபிப்பிராயம் ஒன்றும் இல்லை” என்றேன்.

“ஏன்?” என்று கேட்டார் நண்பர்.

“வசன கவிதை என்றால் என்னவென்றே எனக்குத் தெரியாது. அப்படியிருக்க, அதைப் பற்றி அபிப்பிராயம் என்னமாய்ச் சொல்ல முடியும்?” என்றேன்.

“இதைக் கேளுங்கள்” என்று சொல்லி, நண்பர் சில வரிகளைப் படித்துக் காட்டி, “எப்படி?” என்றார்.

“தூசோ! இதுதான் வசன கவிதை என்பதா? இதில் வசனமும் இல்லை, கவிதையும் இல்லை, என்ன விஷயம் என்பதும் புரியவில்லை. இதுதான் வசன கவிதையென்றால் வசன கவிதை எனக்கு வேண்டியதில்லை!” என்றேன்.

இந்தச் சம்பாஷணை நடந்து வெகு காலத்திற்குப் பிறகு, நாமக்கல் கவிஞரின் “அவனும் அவனும்” என்னும் புத்தகத்தைப் பார்க்க நேர்ந்தது.

கொஞ்சம் படித்ததும், “வசன கவிதை” என்பதற்குப் பொருள் விளங்கிற்று. “வசன கவிதை” என்று இந்த நூலின் நடையைத் தான் சொல்ல வேண்டும். இதில் கையாண்டிருக்கும் விஷயம், சாதாரணமாக வசனத்திலே சொல்லுவதற் குரியது. ஆனால் அதைக் கவிதை நடையில், துள்ளிக் குதித்தோடும் அழகிய சந்தங்களில், பொருத்தமான மோனை எதுகை அமைந்த வரிகளாக நாமக்கல் கவிஞர் இயற்றியிருக்கிறார்.

“எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்து கொள்ளக் கூடிய சந்தம்” இவை பொருந்திய காவியங்களைச் செய்ய வேண்டும் என்னும் பாரதியாரின் மனோரதத்தை நாமக்கல் கவிஞர் அருமையாகப் பூர்த்தி செய்திருக்கிறார்.

இப்படிப்பட்ட வசன கவிதை ந தமிழுக்குப் புதியதல்ல. அல்லி அரசா மாலை முதலிய நூல்கள் வசன கவிதைக் உதாரணமாகத் தமிழில் இருக்கின்றன.

அந்த முறையில் சுவைக் கருத்துக்க அமைத்தும் இந்தக் காலத்துச் ச வாழ்க்கையை அடிப்படையாகக் கொண் இந்த நூலை நமது காந்தியக் கவிஞர் இய யிருக்கிறார்.

ஒரு சுலபமான கதையை எளிய த வசன நடையில் எழுதியிருந்தால் எப்ப நன்கு தடையின்றி வாசித்து ஒரே மூச் புத்தகத்தை முடிப்போமோ அப்படி இந்த வசன கவிதைப் புத்தகத்தை எவ்வித சிரமமும் இல்லாமல் ஒரே மூச் படித்து முடிக்கலாம்.

இந்த நூலுக்கு “அவனும் அவனு என்று தலைப்பைக் கொடுத்த போ நாமக்கல் கவிஞர் இரண்டே சொற்க உலக சிருஷ்டியின் அற்புதத்தை சொல்லி விட்டார்.

“அவனும் அவனும்” என்று படி வுடனே நமது மனக்கண் முன்னால் ப சிவனும் பார்வதியும் பிரத்யட்சமாகிறார் மகாவிஷ்ணுவும் மகாலக்ஷ்மியும் கா யளிக்கிறார்கள். மன்மதனும் ரதியும் உ மாகிறார்கள். இராமனும் சீதையும் வி மாகிறார்கள். சித்தார்த்தரும் யசோத யும் தோன்றுகிறார்கள். அரிச்சந்திர சந்திரமதியும் நளனும் தமயந்தியும் ச வானும் சாவித்திரியும் பிரிதிவி ராஜ சம்யுக்தையும் பவனி வருகிறார்கள்.

என்னென்ன காவியங்களும் களும் சுவைக்களும் நாடகங்களும் இருக்கிறேமோ, அவ்வளவிலும் உள்ள நாயகர்களும் கதா களும் வரிசை வரிசை வந்து மறைகிறார்கள்.

பார்க்கப் போனா எல்லா இதிகாசங் காவியங்களும் கதை அவனையும் அவளையு றியே எழுதியவையல்

இந்தக் கதையில் “அவன்” அதாவது நாயகி கமலம் எந்த வன் என்று கேட்டா

'சந்திர வதனம்' என்றும்
　　சந்திரன் மறுநாள் தேய்வான்
'அந்தரப் பெண் போல்' என்றும்
　　அவனிநாம் பார்த்ததில்லை

'செந்திரு மகள்போல்' என்றும்
　　திருவினைக் கண்டார் யாரே?
'சுந்தர வடி'வென் றுரும்
　　சொல்லிலே வலிமை இல்லை!

இப்படி உவமை சொல்ல முடியாத அழகு அமைந்த கன்னிகை அவள்.

"அவன்" ஆகிய மாதவன் எப்படிப்பட்டவன் என்று தெரிய வேண்டுமானால், இதைக் கேளுங்கள்:—

உடைகளில் அழகு பார்ப்பான்
　　உண்கலம் அழகு பார்ப்பான்
குடைதடி படுக்கை மேஜை
　　குர்ச்சியில் அழகு பார்ப்பான்

கடைகளில் அழகாய்த் தோன்றக்
　　கண்டதை யெல்லாம் வாங்கி
அடைவுற வீட்டில் எங்கும்
　　அலங்கரித் தழகு பார்ப்பான்!

இவ்வாறு அழகிலே ஆசை கொண்டவன், அழகே உருவான கமலத்திடம் ஆசை கொள்ளாமல் இருப்பானா?

ஆசை கொள்ளத்தான் செய்கிறான். அவளும் அவனிடம் காதல் கொள்கிறாள்.

கலியாணம் நடக்கிறது. தம்பதிகளுக்குப் பெண்மகவு ஒன்றும் பிறக்கிறது.

மாதவன் - கமலம் இவர்களுடைய இல் வாழ்க்கையைத் தமிழர் பண்பாட்டின் சிகரமாகக் கவிஞர் வர்ணனை செய்திருக்கிறார். அதையெல்லாம் படிக்கும்போது நமக்குப் பெருமையாக இருக்கிறது; கொஞ்சம் பொறாமையாகவும் இருக்கிறது.

ஆனால் அவர்களுடைய வாழ்க்கை அப்படியே இன்ப மயமாக இருந்து விடவில்லை. இருந்துவிட்டால், அப்புறம் கதை ஏது? காவியம் ஏது? அவர்களுடைய சாதாரண வாழ்க்கையைக் காவியப் பெருமை வாய்ந்ததாகச் செய்வதற்கு சாகவனும் சாரதாவும் வந்து சேருகிறார்கள். அவர்களோடு விபரீதங்களும் தொடர்ந்து வருகின்றன. காதலர்கள் பிரிகிறார்கள்; கணக்கில்லாத கஷ்டங்களை யடைகிறார்கள்.

அவற்றை யெல்லாம் நேயர்கள் புத்தகத்திலே படித்துத் தெரிந்து கொள்வார்களாக. கடையில் எல்லாம் களிப்போடு முடிகிறது என்று மட்டும் சொல்லி வைக்கிறேன்.

அழகான கதை; மிக அழகான தமிழ்; மிக மிக அழகான புத்தகம்.

அழகை விரும்புகிற தமிழர்களுக்கெல்லாம் அருமையான இலக்கிய விருந்து.

# காலக்ஷேபம்

### சரியான வியாபாரம்!

...ண்ணன் (சோம்பேறித் தம்பியைப் ...த்து):—என்னடா கிட்டு! நீ இப்படிச் ...ம்பேறியாய் இருக்கிறாயே! நெற்றி ...ர்வை நிலத்தில் விழும்படி உழைப்ப...கள் மத்தியில் நீ எப்படிப் பிழைக்கப் ...கிறாய்?

...ட்டு:—ஏன்? நான் கைக்குட்டை வியா...ம் செய்து பிழைத்துக் கொள்கிறேன்.

—எஸ். குருசாமி.



### உண்மை

...கப்பனார்:—ஏலே! என்னிடம் பொய்யா ...ன்னாய்? இந்தப் புஸ்தகம் குஸ்திச் ...டையில் நீ ஜயித்ததற்காகப் பரிசு ...டுத்தது என்றாயே! இது கணக்கில் ...லாக இருந்ததற்காக வேறு யாரோ ஒரு ...யனுக்கல்லவா கொடுத்திருக்கிறார்கள்?

...ன்:—ஆமாம், அப்பா! அந்தப் பைய...டுதான் நான் குஸ்திச் சண்டையிலே ...யித்துப் புஸ்தகத்தைப் பெற்றேன்!

—ஜி. கிருஷ்ணமூர்த்தி.

### காரணம் என்ன?

விருந்து முடிந்த பிறகு இரண்டு பெரிய மனிதர்கள் பேசிக் கொள்கிறார்கள்:

முதல் மனிதர்:—பேஷ்! ரொம்ப நல்ல விருந்து; சமையலெல்லாம் முதல் தரம். யார், சமையற்காரன்? புதிதாக யாரையாவது வைத்திருக்கிறீர்களோ? நமக்கு அனுப்பி விடுங்கள் ஸார், அவனை!

இரண்டாவது மனிதர்:—நீங்கள் போன வாரம் ஒரு சமையற்காரனை 'டிஸ்மிஸ்' செய்தீர்களே, அவன் தான் இப்போது நம்ம வீட்டில் இருக்கிறான். இன்று நீங்கள் சாப்பிட வரப்போகிறீர்கள் என்றேன். அதனால்தான் சாப்பாடு இப்படி முதல்தரமா யிருக்கிறது!

—எஸ். வேலு.



### விரட்டு, சனியனை!

மனைவி (ஆபீஸுக்குப் போகும் கணவனைப் பார்த்து):— ஆபீஸிலிருந்து வரும்போது இரண்டு மசால் வடை வாங்கி வாருங்கள்; எலிக் கூண்டில் வைக்க வேண்டும்.

கணவன்:—வீட்டில் செய்வதையே எலிக்கும் வை, போதும்! இல்லா விட்டால் அடித்து விரட்டு, சனியனை! —கே. நரசிம்ம அய்யர்.

# சமையலறையில் ஸ்டிரைச்

☆ ☆ ☆ ☆ சாவி ☆ ☆ ☆ ☆ ☆ ☆ ☆ ☆

காலைப் பத்திரிகையைப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

தபால்காரர் வேலை நிறுத்தம்
டிராம், பஸ் வேலை நிறுத்தம்
ஓட்டல் ஊழியர் வேலை நிறுத்தம்

இப்படி எங்கே பார்த்தாலும் ஒரே வேலை நிறுத்தச் செய்தியா யிருந்தது.

"சீச்சீ! இந்த உலகம் போகிற போக்கைப் பார்த்தால் இன்னும் சில தினங்களில் முதலாளிகள் அல்லவா வேலை நிறுத்தம் செய்ய வேண்டும் போலிருக்கிறது?" என்று எனக்கு நானே யோசித்துக் கொண்டிருந்தேன். மணி ஏழு ஆகியும் சமையல் கட்டிலிருந்து காலைக் காப்பி வந்து சேரவில்லை. ஒரு கூச்சல் போட்டு "எங்கே காப்பி?" என்று மனைவியை அதட்டினேன். பதில் வரவில்லை. அதற்குப் பதிலாக எ மேஜை மீது ஒரு நோட்டீசு வ விழுந்தது. நோட்டீஸைப் பிரித்து பார்த்தேன். என்ன ஆச்சரியம்! அ என் மனைவி எனக்குக் கொடுத்திரு 'ஸ்டிரைக்' நோட்டீசு. அது வருமாறு:

ஆறு வருஷ காலமாக நான் கேட் கொண்டிருந்த சில கோரிக்கைகளை நா களை தாங்கள் காரியாம்சத்தில் நி வேற்ற வில்லை. யுத்தத்தைக் காரண காட்டிச் சாக்குப் போக்குச் சொல் கொண்டிருந்தீர்கள். இப்போது யுத் முடிந்து விட்டது. தங்கள் ஆபீஸில் சம் உயர்வும் கிடைத்திருக்கிறது. அப்படி யி தும் என்னுடைய நியாயமான கோரிக் குத் தாங்கள் இதுவரை செவி சாய் வில்லை. எனவே, இந்த நோட்டீஸ் கண் இருபத்துநாலு மணி நேரத்துக்குள் ளுடைய நீண்ட நாள் கோரிக்கைய வைரத் தோடு வாங்கிக் கொடுக்கவி யென்றால் நாளைக் காலைச் சாப்பாட்டு வேறு எங்கேயாவது ஏற்பாடு செ கொள்ளவும்.

இப்படிக்குத் தங்கள் சமையலை
தொழில



இந்தக் கடிதத்தை படித்து முடித்த எனக்கு மூர்ச்சை போ போல் இருந்தது. அப்படி மூர்ச்சி விழுந்தால் காப்பி கொடுக்கக்கூட கிடையாதே என்று அந்த யோசனை கை நழுவ விட்டேன்.

• • •

இந்த நாசமாய்ப் போன 'ஸ்டி வியாதி என் வீட்டு சமையல் கட்டு வ பரவும் என்று நான் சொப்பனத்தி கருதவில்லை.

வைரத் தோடு வேண்டுமாம்! இல் பட்சத்தில் வேலைநிறுத்தம் செய்வாளா 24-மணி நேர நோட்டீஸாம்! நியாயம கோரிக்கையாம்! ரொம்ப நியாயம கோரிக்கைதான்! இதெல்லாம் படி தெரிந்த பெண்களைக் கலியாணம் செ

சொன்னதால் ஏற்படும் கஷ்டங்கள். வாசிக்கத் தெரிந்திருப்பதால்தானே இவளும் பத்திரிகைச் செய்திகளைப் பார்த்து விட்டு 'ஸ்டிரைக்' செய்வேன் என்று பயமுறுத்துகிறாள்? 'ஸ்டிரைக்'தான் செய்யட்டுமே! வேலை நிறுத்தம் செய்துவிட்டு இவள் மட்டும் எப்படிச் சாப்பிடப் போகிறாளாம்? அதையும்தான் பார்த்து விடுகிறேன். ஓஹோ! பிறந்த வீடு இருக்கிறதோ இவளுக்கு?

என்பாடுதான்......ஐயையோ, ஓட்டல் கூடக் கிடையாதே; அங்கேயும் 'ஸ்டிரைக்' அல்லவா? இதென்ன கஷ்டம்? வைரத் தோட்டுக்கு நான் எங்கே போவேன்? சரி, சரி; இதற்கு ஏதாவது வழி செய்து ஆகவேண்டியதுதான். விஷயத்தை மத்தியஸ்தத்துக்கு விடலாமா? ஆனால் மத்தியஸ்தம் முடிந்து தீர்ப்புக் கூறுகிறவரை என்ன செய்கிறது?

* * *

நான் எதிர்பார்த்தபடி மறுநாள் என் மனைவி பிறந்தகத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டாள்.

வேறு வழியில்லாமற் போகவே நானே சமைத்துக் கொள்வது என்ற முடிவுக்கு வந்தேன்.

வீட்டுக்குத் திரும்பியதும் காப்பி போடலாம் என்று பாத்திரங்களை எடுக்கப் போனேன். அவைகள் துலக்கப் படாமலோ அல்லது எஜமானியம்மாள் போய் விட்டாளே என்ற வருத்தத்தாலோ அழுது வடித்து கொண்டிருந்தன.

அவற்றைத் துலக்கச்சொல்லலாம் என்று நினைத்து வேலைக்காரியைக் கூப்பிட்டேன். அவள், தானும் எஜமானியம்மாளுக்கு அநுதாபமாக வேலை நிறுத்தம் செய்திருப்பதாய்ச் சொல்லி விட்டுப் பேசாமல் போய் விட்டாள். காப்பி போடப் பால் இருக்கிறதா என்று பார்த்தேன். ஊஹூம்; அதையும் காணோம். பால்காரியும் எஜமானி அம்மாளுக்கு அநுதாபமாக வேலை நிறுத்தம் செய்திருக்கிறாள். ஓஹோ! அவ்வளவுக்கு ஆய்விட்டதா விஷயம்? சரி; சமையலே செய்து விடலாம் என்று எண்ணி மணி என்ன வென்று பார்க்கப் போனேன். என்ன ஆச்சரியம்! கடிகாரமும் வேலை நிறுத்தம் செய்து காலை ஆறு மணிக்கே நின்று போயிருந்தது. எஜமானி அம்மாளுக்கு அநுதாப ஸ்டிரைக் போலும்!

ஆனது ஆகட்டும் என்று அடுப்பைப் பற்ற வைத்தேன். விறகு எரியமாட்டேன் என்று சொல்லி 'ஸ்டிரைக்' செய்து விட்டது. அநுதாப ஸ்டிரைக்!

அதற்குமேல் என்ன செய்வதென்று என் மூளையும் வேலை செய்ய மறுத்து விட்டது. அநுதாப ஸ்டிரைக்!

* * *

அன்றைக்கு மட்டும் என் நண்பர் வீட்டில் சாப்பிட்டு விட்டு ஆபிஸுக்குச் சென்றேன். மறு நாள் என் நண்பரின் மனைவி தான் 'கருங்காலி'யாக உபயோகப்பட மாட்டேன், அதாவது என் மனைவியின் ஸ்ட்ரைக்கை உடைப்பதற்கு உதவி செய்ய மாட்டேன் என்று சொல்லிச் சாப்பாடு போட மறுத்துவிட்டாள்.

நிலைமை மோசமாகி விட்டதால் விஷயத்தை மத்தியஸ்தத்திற்கு விடவேண்டியதுதான் என்று நிர்மானித்து என் அக்காளை வரவழைத்தேன். வீட்டில் சமையலுக்காகவும், மத்தியஸ்த வேலைக்காகவும் அவள் ஒத்தாசையா யிருப்பாள் என்பதற்காகத்தான். அக்கா மறுதினமே வந்து சேர்ந்தாள்.

மத்தியஸ்தமும் ஆரம்பமாயிற்று. என் மனைவியின் சார்பாக அவளுடைய அத்தையும் என் சார்பாக என்னுடைய அக்காவும் வாதாடினார்கள். அடுத்த வீட்



டுப் பாட்டி அம்மாள் 'அட்ஜுடிகேட்'ராய் (மத்தியஸ்தராய்) நியமிக்கப்பட்டாள்.

பேச்சு வார்த்தைகள் பத்துப் பதினைந்து தினங்களுக்கு மேல் நீடித்தன. மனைவியினுடைய 'நியாயமான கோரிக்கைகளை' எடுத்துச் சொல்லி அவளுடைய அத்தை தீவிரமாக விவாதித்தாள்.

என்னுடைய கட்சியை என் அக்காள் எடுத்துக் கூறிச் சமாதானம் செய்யப் பார்த்தாள். இப்படியாக இருதரப்பிலும் நீண்ட நாள் விவாதம் நடந்தது.

நான் மத்தியஸ்தர் தீர்ப்புப்படி நடப்பதாகவும் வேலைக்கு வரலாம் என்றும் மனைவிக்குத் தூதுவிட்டுப் பார்த்தேன்.

என் மாமனார் மாமியார் இருவருடைய முயற்சியின் காரணமாக மனைவியும் தாற்காலிகமாக 'ஸ்டிரைக்'கை நிறுத்தி விட்டு வேலைக்கு வர ஒப்புக் கொண்டாள்.

சீக்கிரத்தில் மத்தியஸ்தரின் தீர்ப்பும் வெளியாயிற்று. என் மனைவியின் கோரிக்கையில் ஏறக்குறைய முக்கால் திட்டத்துக்கு — அதாவது நான் இப்போதைக்கு வைர பேஸரி ஒன்று வாங்கிப் போட வேண்டும் என்று — தீர்ப்புக் கூறப்பட்டது.

இவ்வளவோடாவது விட்டதே என்று நினைத்து 'வைர பேஸரி'யை வாங்கிப் போட்டேன். மனைவியும் அகப்பட்டவரை லாபம் என்று சாமர்த்தியமாகத் தன்னுடைய 'ஸ்டிரைக்' கோட்டையை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டாள்! — பழைய படி இப்போது வீட்டு வேலை ஒழுங்காக நடந்து வருகிறது.

○ ✶ ○

# அரிய சந்தர்ப்பம்

நிழல் சாயாத கோபுரத்தினால் நீண்ட காலமாகச் சாயாத கீர்த்தியைப் பெற்றிருக்கும் தஞ்சை ஜில்லாவில் எத்தனை எத்தனையோ கர்நாடக சங்கீதக் கலை மேதாவிகள் தோன்றியிருக்கின்றனர். அவர்களுள் பிரம்மஸ்ரீ ஆலங்குளம் வைத்தியநாத பாகவதர் ஒருவர்.

ஆங்கிலக் கல்வி கற்றுச் சில காலம் கல்வி இலாகாவில் உத்தியோகம் பார்த்த பிறகு, தமது சங்கீத மேதையைப் பயன்படுத்த எண்ணி அப்பெரியார் கதா காலட்சேபத் துறையை மேற்கொண்டார். சர்வஜன ரஞ்சகமான கதா காலட்சேபங்களைச் செய்து பெயரும் புகழும் அடைந்தார்.

சங்கீத உலகத்தில் ஸ்ரீ மகா வைத்தியநாத சிவன், சரப சாஸ்திரிகள், பூச்சி ஐயங்கார், திருக்கோடிகாவல் கிருஷ்ணையர் ஆகிய மகா வித்வான்களின் கோஷ்டியில் இடம்பெற்று, அவர்களுடைய சிநேகத்தையும் நன்மதிப்பையும் பெற்றிருந்தார்.

திருவையாற்றில் ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவ கைங்கரியத்தில் பூரண பக்தியுடன் ஈடுபட்டுச் சுமார் 35 வருஷ காலம் உற்சவக் காரியதரிசியாக இருந்து பணியாற்றி வந்தார்.

"கர்நாடக சங்கீத வித்வான்கள்" என்ற தலைப்பின் அவர் "கல்கி"யில் தொடர்ந்து எழுதிவந்த கட்டுரைகளை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள்.

ஸ்ரீ வைத்தியநாத பாகவதர் அவர்கள் தமது எழுபத்தைந்தாவது வயதில் துறவறம் பூண்டு 1943-ம் ஆண்டில் மகா சமாதி அடைந்தார்.

சங்கீதக் கலைக்கு அரும்பெரும் சேவை செய்த ஆலங்குளம் வைத்தியநாத பாகவதரின் பெயர் சங்கீதமும் சாஹித்யமும் உள்ளவரையில், நின்று நிலைக்கும்படி செய்ய வேண்டியது சங்கீத அபிமானிகளின் கடமையாகும். பாகவதரின் ஞாபகார்த்தமாக அவர் பிறந்த ஊராகிய ஆலங்குளத்தில் சீதாகல்யாண மகோத்ஸவ மண்டபம் கட்ட வேண்டுமென்று முயற்சி தொடங்கப் பட்டிருக்கிறது. அந்த முயற்சிக்கு உதவி செய்யச் சிறந்த சங்கீத வித்வான்கள் முன் வந்திருக்கிறார்கள்.



சங்கீத ரத்னாகர ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ ஐயங்கார், ஸ்ரீ குன்றக்குடி வெங்கடராமய்யர், நாட்டிய நிபுணர் ஸ்ரீ கோபிநாத், சங்கீத கலாநிதி பல்லடம் சஞ்சீவி ராவ் ஆகிய வித்வான்கள் 8—8—46, 9—8—46 இரண்டு நாட்களிலும் மயிலை ரஸிகரஞ்சனி சபாவில் கச்சேரி செய்வார்கள். ஒரே சமயத்தில் இசை விருந்தை நுகரவும், சங்கீதக் கலைக்கு அரிய சேவை செய்த ஓர் உத்தம புருஷரின் ஞாபகார்த்த நிதிக்கு உதவி செய்யவும் நேர்ந்திருக்கும் இந்த அரிய சந்தர்ப்பத்தைச் சென்னை அன்பர்கள் கைநழுவ விடமாட்டார்கள் என்று நம்புகிறோம்.

## மகாத்மா காந்திக்கு ஜே!

மகாத்மா காந்தியடிகளின் 'தமிழ் ஹரிஜன்' வாரப் பத்திரிகை உங்களுக்குக் கிடைக்கிறதா? இல்லையெனில் சந்தாதாரராகச் சேர்ந்து விட்டால் சுலபமாகக் கிடைக்கும்.

# தமிழ் ஹரிஜன்

| | | |
|---|---|---|
| வருடச் சந்தா | ... | ரூ. 7—0—0 |
| (தபால் செலவு உள்பட) | | |
| ஆறு மாதச் சந்தா | ... | ரூ. 3—8—0 |

★

## தமிழ் ஹரிஜன்

தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை-17




## அரைக்கீரை விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண், மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள்:

## டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

●

மதராஸ் ஸிடி ஏஜண்டுகள்:

புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும் பாலக்காடுக்கும் சோல் ஏஜண்டு:

B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்



# ஏமாந்த மாமனார்

**" வீரவேலவன் "**

" வனஜா! வனஜா!" என்று வாசற் கதவைத் தட்டினார் வெங்குவையர்.

" இதோ வந்து விட்டேன், அப்பா!" என்று குரல் கொடுத்துக் கொண்டே ஓடி வந்து கதவைத் திறந்தாள் அவருடைய செல்லப் பெண்.

உள்ளே சென்று அமர்ந்ததும், " கிடக்கிறான் பிச்சைக்காரப் பயல்! அப்புறம் என் பெண்ணுக்கு வேறு வரனே கிடைக்காதென்று நினைத்துக் கொண்டானோ? அப்படி மூவாயிரம் ரூபாய் கொடுத்து இவனுடன் என்ன சம்பந்தம் வேண்டிக் கிடக்கு!" என்றார் வெங்குவையர்.

வனஜாவைக் கண்களுக்கு மட்டும் ஏற்ற விருந்தென்று நினைக்க வேண்டாம்; பாட்டு, பணிவு இவைகளினால் மனத்திற்கும் உகந்த விருந்தளிக்கக் கூடியவள். பணமும் கூட இருந்திருந்தால் வரன்களுக்கென்ன பஞ்சமா? ஆனால் அது மட்டும் வெங்குவையரிடத்தில் பூஜ்யம். இரண்டு வருஷங்களுக்கு முன் பெண்ணுக்கு எந்த விதத்தில் கல்யாணத்தை முடிப்பது என்று கலங்கிக் கொண்டிருந்த சமயத்தில் அவருடைய தூரபந்துவான சாமாவையர் வலுவில் வந்து தம் பிள்ளை ரகுவுக்குப் பண்ணிக் கொள்வதாகவும், வரதட்சிணை ஒன்றும் வேண்டாமென்றும் சொல்லியிருந்தார். தாயில்லாப் பெண்ணுக்கு அதைவிட நல்ல இடம் இருப்பதாக வெங்குவையர் புத்திக்கு எட்டவில்லை.

ரகு அப்பொழுது காலேஜில் படித்துக் கொண்டிருந்தான். அவன் படிப்பு முடியட்டுமென்று இருவரும் காத்துக் கொண்டிருந்தனர். இருந்தாற் போலிருந்து, மூவாயிரம் ரூபாய் வரதட்சிணை கொடுத்தால்தான் முடியும் என்று சாமாவையர் கண்டித்துச் சொல்லி விட்டாரென்றால் பெண்ணைப் பெற்றவருக்கு எவ்வளவு மனத் தாங்கல் இருக்கும்!

அவர் கூறிய வார்த்தைகளிலிருந்து விஷயம் பூராவையும் கிரகித்துக் கொண்டாள் வனஜா. அவளுடைய இதய கமலத்தில் ரகுவின் பிம்பத்தைப் பிரதிஷ்டை செய்த பிறகு வேறொரு புருஷனைக் கணவனாக ஏற்றுக்கொள்ள மனம் சம்மதிக்குமா? ஆனாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் தன் தந்தையிடம், "அப்பா, எனக்காக ஒரு பிள்ளையைப் பகவான் சிருஷ்டி செய்திருப்பார். எங்கே முடி போட்டிருக்கோ அங்கே நடக்கும். வீணாக ஏன் கவலைப்படுகிறீர்கள்?" என்று தேறுதல் கூறினாள்.

பதினாறு வயதுகூட நிரம்பாத அந்தச் சிறுமியின் புத்தி விசாலத்தைக் கண்டு பிரகாசமடைந்த கண்களுடன், " அதற்குச் சொல்லவில்லை, வனஜா! சாமாவினுடைய நம்பிக்கைத் துரோகத்திற்குத்தான் சொல்ல வந்தேன். சொல்லப் போனால் அவன் உனக்கல்லவா மூவாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும்! என்னமோ, பிள்ளையாண்டானுக்கு அறுபது ரூபாய் சம்பளத்தில் பம்பாயில் ஒரு வேலை கிடைத்து விட்டதாம். தலை கிறுகக் கவிழ்ந்து போகிறான்!" என்றார்.

மகேந்திரமங்கலத்தில் உள்ள புரோகிதர்களில் சாமாவையரும் ஒருவர். வைதிகக் கிரியைகளில் தலைமை வகிப்பவராதலால், கொஞ்சம் வரும்படி அதிகமுள்ளவர் என்பதைத் தவிர, பூர்விகமான சொத்தோ அல்லது சுய சம்பாத்தியத்தில் சேர்த்ததோ ஒன்றும் கிடையாது. எப்படியோ பெரிய மனிதர்களின் உதவியைக் கொண்டு ரகுவை பி. ஏ. வரை படிக்க வைத்திருந்தார்.

பிள்ளைக்கு வடக்கே வேலையாகப் போகிறது என்றதுமே அவருடைய உள்ளத்தில் வரதட்சிணைப் பேய் புகுந்து கொண்டது. வேலைக்கு உத்தரவு வந்ததும் அவர் விபூதிப்பட்டை போடும் மூன்று விரல்

களையும் வெங்குவையருக்கு முன்னால் செங்குத்தாக நிறுத்திக் காட்டி, "ரூபாய் மூவாயிரம் உண்டானால் கல்யாணத்தைப் பற்றிப் பேசு!" என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டார்.

வனஜாவை வாழ்க்கைத் துணைவியாகப் பெறுவதில் ரகுவுக்கும் எவ்வளவோ ஆசைதான். இரண்டு வருஷங்களுக்கு முன் கல்யாணப் பேச்சு ஆரம்பமானதிலிருந்து இருவர் உள்ளத்திலும் ஊறிய அன்பு வெள்ளம் காதலாகப் பெருக்கெடுத்தோடியது.

இயற்கையாகவே சாமாவையர் முரட்டுச் சுபாவம் படைத்தவர். அவரைப் பிடித்த வரதட்சிணைப் பேயை ஓட்டுவது அவ்வளவு சுலபமான காரியமில்லையென்பது ரகுவுக்குத் தெரியும். தனக்கும் வனஜாவுக்கும் உள்ள மன ஒற்றுமையைத் தெரியப்படுத்தி, காரியத்தைச் சாதித்துக் கொள்ளவும் அவனுக்குத் தைரியம் ஏற்படவில்லை. காலப் போக்கில் வனஜாவை எப்படியும் அடையலாம் என்ற நம்பிக்கையுடன், "கல்யாணத்திற்கு இப்பொழுது என்ன அப்பா அவசரம்? எல்லாம் வேலைக்குப் போய் ஒரு வருஷம் இரண்டு வருஷம் கழித்துப் பார்த்துக் கொள்ளலாமே? அதற்குள் சம்பளம் உயர்ந்தால் ரூபாய் மூவாயிரமென்ன, அதற்கு மேலும் வரதட்சிணை வாங்கலாம்!" என்று வெகு தந்திரமாகச் சொல்லி விட்டுப் பம்பாய்க்குப் போய்விட்டான்.

பம்பாய்க்குப் போவதற்கு முன் வெங்குவையரிடம் விடை பெற்றுக்கொள்ள வந்த ரகு, வனஜாவைத் தனிமையில் காணும்படி நேர்ந்தது. அவசர அவசரமாக, "வனஜா. உன்னை நான் மனப்பூர்வமாக நேசிக்கிறேன். வரதட்சிணையைப் பற்றிய பயம் வேண்டாம். என்னை மணந்து கொள்வதில் உனக்குச் சம்மதந்தானே?" என்று வலது கையை அவளுக்கு முன்னால் நீட்டினான். கைமேல் கை வைத்து வனஜா தன் சம்மதத்தைத் தெரிவித்ததும், "இன்னும் கொஞ்ச காலம் பொறு. நான் உன்னையே கல்யாணம் செய்து கொள்கிறேன்" என்று கூறி விட்டுப் போய்விட்டான்.

✶

அதிர்ஷ்டம் வந்தாலும் இப்படியல்லவா வரவேண்டும்! மூன்று வருஷ காலமாகப் பெரிய இடத்துப் பெண்ணாகத் தேடிக் கொண்டிருந்த சாமாவையருக்கு ஒரு லட்சாதிகாரியின் ஏகபுத்திரி நாட்டுப் பெண்ணாக வாய்க்கப் போகிறாள் என்றால் கேட்பானேன்?

ஏதோ காரியமாக, சாமாவையர் திருச்சிராப்பள்ளிக்குப் போயிருந்தபோது அகஸ்மாத்தாக மிராசுதார் மணி ஐயரைப் பார்க்க நேர்ந்தது. பேச்சு வாக்கில் ரகுவுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை என்பதைத் தெரிந்துகொண்ட மணி ஐயர், "என், நம்ம லலிதா இருக்கும் போது வேறு பெண்ணைப் போய் எதற்காகத் தேடவேண்டும்? அவ்வளவு சொத்தையும் கட்டியாள ஒரு பிள்ளை இல்லாமற் போனாலும், ஒரு பெண்ணைப் பெற்ற எனக்கு ரகுவை மாப்பிள்ளையாகப் பெறுவது எவ்வளவோ சந்தோஷமான விஷயமல்லவா?" என்றார்.

சாமாவையருக்குப் பணந்தானே பிரதானம்? எதிர்பார்த்ததற்கு மேல் லட்ச ரூபாய் ஆஸ்தியுடன் தன் பிள்ளைக்கு ஒரு பெண் வரப் போகிறாள் என்று தெரிந்ததும் அவருக்கு ஏற்பட்ட குதூகலத்திற்கு எல்லை ஏது! மணி ஐயரின் எதிர்பாராத பேச்சினால் சற்று நேரம் திக்குமுக்காடி விட்டு, "அவ்விடத்துச் சம்பந்தம் கிடைப்பதற்குக் கொடுத்து வைக்க வேண்டும். ஏதோ பகவானுடைய கிருபையிலே எல்லாம் கூடிவந்தால், வர ஆனி மாதம் இருபத்து நாலாம் தேதி யன்றைக்கு நாள் ரொம்ப நன்றாயிருக்கிறது: அன்றைக்கே கல்யாணத்தைச் செய்து விட்டால் போகிறது" என்றார்.

"அப்படியானால் உம்முடைய இஷ்டப்படி ஆனி மாதமே நடத்தி விடலாம். பையனுக்குக் கடிதம் எழுதிப் போட்டு அவனை நேரே இங்கே வரச் சொல்லி, நீரும் குடும்ப சகிதமாக இன்னும் ஒரு வாரத்தில் வந்து சேரும். கல்யாணத்தை இங்கேயே முடித்து விடலாம். அதற்கு ஆகும் செலவெல்லாம் என்னைச் சேர்ந்தது!" என்று சொல்லி, சாமாவையருக்கு விடை கொடுத்து அனுப்பினார்.

மேளக்கிரமங்கலம் முழுவதும் ரகுவுக்கு அடித்த யோகத்தைப் பற்றியே பேச்சாக இருந்தது. அதில் பங்கெடுத்துக் கொள்ளாமல் தூர இருந்தபடியே கவனித்து வந்த இரு ஜீவன்கள் வெங்குவையரும் வனஜாவும் என்பதைச் சொல்ல வேண்டுமா?

பருவ காலத்தின் எழிலைத் தாங்க மாட்டாமல் தாங்கிக் கொண்டிருந்தாள் வனஜா. ரகுவைப் பற்றிய நினைவு உச்சத்தை யடையும் போதெல்லாம், "இன்னும் கொஞ்ச காலம் பொறு; உன்னையே கல்யாணம் செய்து கொள்கிறேன்!" என்று அவன் சத்தியம் செய்து கொடுத்த சம்பவம் திரும்பத் திரும்ப மனக் கண்முன் தோன்றி அவளைப் பரவசப்படுத்தியது.

இந்த நிலையில், ரகுவுக்கும் லலிதாவுக்கும் கல்யாணம் நடக்கப் போகிறது என்ற செய்தி அவனுக்கு எட்டியதும் நிலை கலங்கிப் போனான். கொடுத்த வாக்கை மீற மாட்டார் என்று என்னதான் திடமாக நம்பினாலும், சொத்தை உத்தேசித்து ஒருவேளை லலிதாவை விவாகம் செய்து கொள்ளச் சம்மதித்து விடுவாரோ என்ற சந்தேகம் அவன் மனதில் புகுந்து கொண்டது.

ரகுவிடமிருந்து சாமாவையருக்கு வந்த பதில் கடிதத்தில், தகுந்த இடத்துப் பெண்ணாகக் கிடைத்ததைப் பற்றி வெகுவாகப் புகழ்ந்து எழுதியிருந்தது. ஆனி மாதம் இருபத்துநாலாம் தேதியன்றைய தினம் திருச்சிராப்பள்ளியில் வந்து இறங்குவதாகவும், ஆபீஸில் லீவு கிடைக்காததினால், அதற்கு முன் வருவது சாத்தியப்படாதென்றும் அதில் கண்டிருந்தது.

கடிதம் கிடைத்த இரண்டு நாளைக்கெல்லாம் சாமாவையர் குடும்ப சகிதம் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டு திருச்சிராப்பள்ளி போய்ச் சேர்ந்தார். கல்யாண ஏற்பாடுகள் பலமாக நடந்து கொண்டிருந்தன.

ரகு தன்னை மோசம் செய்து விட்டான் என்று தெரிந்ததும் ஏற்பட்ட மனக் கொதிப்பினால் இதயமே வெடித்து விடும் நிலையில் தத்தளித்துக் கொண்டிருந்தாள் வனஜா. அவள் அடைந்த ஏமாற்றத்திற்குப் பரிகாரம் ஏதாவது உண்டா?

* * *

இருந்து இருந்து, ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்கிறார். அதுவும் சற்றுத் தாராள புத்தியுடைய லட்சப் பிரபு என்றால் கல்யாணம் தடபுடலாக நடைபெறும் என்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

ஆனால் சுவரை வைத்துக் கொண்டல்லவா சித்திரம் எழுத வேண்டும்? மறுநாள் பொழுது விடிந்தால் கல்யாணம். இருபத்துநாலாந் தேதியே வந்து குதிப்பதாக எழுதியிருந்த கல்யாண மாப்பிள்ளை இன்னும் வரவில்லை. அந்த முகூர்த்தம் தவறினால், இனிமேல் தை பிறந்துதான். செய்த ஏற்பாடுகளெல்லாம் வீணாய்ப் போவதுடன் நாளைக்கு ஊர் சிரிக்குமே என்று எல்லோருடைய வயிற்றிலும் புளியைக் கரைத்தது.

இரவு மணி ஒன்பது அடித்ததும், "ஸார், தந்தி!" என்று சொல்லிக் கொண்டே வந்த தந்திச் சேவகனைக் கண்டதும் வீட்டில் உள்ளவர்களிடையே பரபரப்பு ஏற்பட்டது. வெகு அவசரமாக மணி ஐயர் அதை வாங்கித் தந்தியைப் பிரித்துப் படித்துப் பார்த்தார். அதில், "ஜனக் கூட்டம் மிகவும் அதிகமாக இருந்தபடியால் வண்டியில் இடமே கிடைக்கவில்லை. எவ்வளவு முயற்சி செய்தும் பிரயாணம் தடைப்பட்டு விட்டது. இந்த மாதத்தில் வேறு முகூர்த்த நாள் இல்லாததால் தங்கி விட்டேன். பிராப்தமிருந்தால் தை பிறந்து பார்த்துக் கொள்ளலாம் ...... ரகு" என்று கண்டிருந்தது.

என்ன செய்வது என்று தெரியாமல் அத்தனை பேரும் குழம்பிப் போய்ச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தனர்.

அனுபவம் வாய்ந்த மணி ஐயரின் தாயாருக்கு மட்டும் இதனால் யாதொரு திகைப்பும் ஏற்படவில்லை. தன் பிள்ளையை அருகில் அழைத்துக் காதோடு காதாய் ஏதோ சொன்னதும், குழப்பம் ஒரு புறம் இருக்க, ஆத்திரத்தினால் குதித்தார் மணி ஐயர்.

"அம்மா, சொத்து விஷயமாய்க் கோர்ட் வரையிலும் போய் அவாளுக்கும் நமக்கும் பேச்சு வார்த்தை கூட இருபது வருஷ



மாய் விட்டுப் போன பிற்பாடு, அவள் காலிலேயா போய் விழச் சொல்லுகிறாய்?" என்றார் பதட்டத்துடன்.

"ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு: காரியம் பெரிதா, வீரியம் பெரிதா? இந்தச் சமயத்தில் நாம் தாழ்ந்துதான் போக வேண்டும். நாளைக்குக் கல்யாணம் நடக்காமற் போனால் ஊரார் ஏசிக் காட்டுவார்களே, அப்பொழுது முகத்தை எங்கே கொண்டு வைத்துக் கொள்வது? என்னமோ, எனக்கு இருக்கிற ஒரே பேத்திக்குக் கல்யாணம் நடப்பதைப் பார்ப்பதற்கு இந்தக் கட்டை கொடுத்து வைத்திருக்கிறதோ, இல்லையோ? யார் கண்டார்?" என்று சொல்லிவிட்டு விசித்து விசித்து அழுதாள் மணி ஐயரின் தாயார்.

கடைசியில் அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் மனது தானாகவே இளகிவிட்டது மணி ஐயருக்கு. அவருடைய தாயாரின் ஒன்று விட்ட தம்பி, வேணுவையரின் பிள்ளை சங்கரனுக்கு லலிதாவைக் கொடுக்க வேண்டுமென்பது தான் அவர் காதோடு காதாய்க் கேட்ட விஷயம். தாயார் ஸ்ரீதனமாகக் கொண்டு வந்த சொத்தின் மேல் புரளும் மணி ஐயருக்கு, அது நியாயமாக வேணுவையரைச் சேர்ந்திருக்க வேண்டுமென்பது தெரிந்ததுதான். ஏதோ ஹைகோர்ட் வரையிலும் போய் வாதாடிய வக்கீலின் சாமர்த்தியத்தினால் கேஸ் இவர்கள் பங்கில் ஜயமாகி விட்டது.

இருந்த சொத்தை யெல்லாம் வழக்காடித் தோற்றுவிட்டுப் பரம ஏழையாய்ப் போன வேணுவையரைத் தர்ம தேவதை கண் விழித்துப் பார்க்க இவ்வளவு காலமாயிற்று. அவர் அப்பொழுது மூசிறியில் குடியிருந்தார். இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு, குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த சமயத்தில், மணி ஐயரும் அவருடைய சம்சாரமும் திடீரென்று வந்து நிற்பதைக் கண்டவுடன் வேணுவையர் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவேயில்லை.

வலுவில் வந்த லட்சுமியை யாராவது காலால் உதைத்துத் தள்ளுவார்களா? சமாசாரம் முழுவதையும் அறிந்து கொண்ட பிறகு, மறு பேச்சில்லாமல் வேணுவையர், மனைவியையும் சங்கரனையும் அழைத்துக்கொண்டு, எல்லோருமாக வந்த காரிலேயே திருச்சினாப்பள்ளிக்குப் போய்ச் சேர்ந்தனர்.

சாமாவையர், அவருடைய மனைவி கஸ்தூரியம்மாள் இவர்களுடைய முகத்தில் வழிந்த ஏமாற்றத்தைப் பார்க்க வேண்டுமே! எண்சாணுடம்பும் குறுகிப்போய், ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் இரவோடு இரவாய்ப் புறப்பட்டு மகேந்திரமங்கலத்திற்குச் சென்றனர்.

மூன்று மாதம் சென்றது. "என்ன சாமா, ரகுவுக்கு எப்பொழுது கல்யாணம் செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டார் வெங்குவையர்.

"அதைப் பற்றி உனக்கென்ன அவ்வளவு அக்கறை?" என்று எரிந்து விழுந்தார் சாமாவையர்.

"உன்னைவிட அதிகமான அக்கறை எனக்கு இருப்பதால்தான் கேட்டேன். கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அலைவானேன்? உனக்கு வேண்டிய மூவாயிரம் ரூபாயையும் இதோ எடுத்துக் கொள். இனிமேல் வனஜாவுக்கும் ரகுவுக்கும் முடி போட வேண்டிய பொறுப்பு உன்னைச் சேர்ந்தது!" என்றபடியே மடியிலிருந்த பணப் பையை அவிழ்த்து அதிலிருந்த முப்பது நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்துச் சாமாவையரிடம் கொடுத்தார்.

சாமாவையருக்குப் பணந்தானே பிரதானம்? அது கிடைத்தபிறகு கல்யாணம் நடப்பதற்குத் தடையென்ன இருக்கிறது? தை மாதம் பிறந்ததும் சுபயோக சுப தினத்தில் வனஜாவுக்கும் ரகுவுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தேறியது.

கல்யாணமான மறுநாளே இளந் தம்பதிகள் பம்பாயை நோக்கித் தங்கள் வாழ்க்கைப் பிரயாணத்தைத் தொடங்கினர். அதிர்ஷ்ட வசமாக, அவர்கள் ஏறியிருந்த வண்டியில் வேறு ஒருவரும் ஏறவில்லை. தனிமையில் பேசுவதற்குக் கிடைத்த இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளாமலா இருப்பார்கள்?

* * *

வனஜா தன் புருஷனைப் பார்த்துப் புன்முறுவலுடன் ஒரு கேள்வி கேட்டாள்.

"இத்தனை வருஷ காலமாகத் தாங்கள் உத்தியோகம் பண்ணி என்ன சம்பாதித்தீர்கள்?"

"உன்னைத்தான் சம்பாதித்தேன்!"

"என்னையா? என்னை எப்படி சம்பாதிப்பது? புதிர் போடுகிறீர்களே?"

ரகு அவளுடைய கன்னத்தைக் கிள்ளிவிட்டு, "புதிர் ஒன்றுமில்லை: இதோ இந்த ஸ்திரீதனத்தை அடைவதற்குத் தான் மூவாயிரம் ரூபாய் சம்பாதித்து வைத்திருந்தேன். அதை உன் தகப்பனாருக்கு அனுப்பி வரதட்சணையாகக் கொடுக்கச் சொல்லி நம்முடைய விவாகத்தை முடித்தேன். ஆகையால் உன்னைச் சம்பாதித்தது நான்தானே?" என்று கேட்டான்.

வனஜா ஆச்சரியத்துடன், "அடாடா! எனக்கு ஒன்றுமே தெரியாதே? ஏமாந்தே போய்விட்டேனே!" என்றாள்.

"நீ ஏமாறவில்லை; ஏமாந்தது உன்னுடைய மாமனார்தான்!" என்றான் ரகு.

# ரேடியோ அனுபவம்!



கோ. ரா.

மூன்று வருஷப் பயிற்சிக்குப் பிறகு நான் இப்பொழுது ஒரு இளம் பாடகனாகப் பரிணமித்திருக்கிறேன். அன்று அகில இந்திய ரேடியோவில் எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருந்தது. நிகழ்ச்சிக்காக நான் காத்துக் கொண்டிருந்தேன்.

“ஸார்!” என்ற குரல்கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். நான் ஏற்கெனவே அடிக்கடி இருமக் கூடியவன் என்று அவருக்கு எப்படித்தான் தெரிந்ததோ, தெரியவில்லை. “உங்களுக்கு இருமல் வந்தால் இப்பொழுதே இருமித் தீர்த்து விடுங்கள், ஸார்!” என்றார். நானும் ஒருவாறு இருமிச் சரிப்படுத்திக் கொண்டேன்.

குறிப்பிட்ட நேரத்தில் என்னுடைய நிகழ்ச்சி ஆரம்பமாயிற்று. ஆனாலும் அந்தப் பாழாய்ப்போன இருமல் இடையே குறுக்கிட்டு, என்னுடைய நிகழ்ச்சியை இவ்வளவு அபத்தமாக்கி விடும் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. எவ்வளவோ கஷ்டப் பட்டும் என்னால் அன்று இருமலை அடக்க முடியவில்லை. எப்படியோ என்னுடைய நிகழ்ச்சியை ஒருவாறு முடித்துக் கொண்டு வெளியே வந்தேன். “உங்களுக்கு இருமல் கிருமல் இருந்தால் இப்பொழுதே இருமித் தீர்த்து விடுங்கள்!” என்று என்னை ஏற்கெனவே எச்சரித்து அனுப்பிய ஆசாமி “என்ன ஸார்! உங்களுக்கு இப்பொழுது தான் முதன் முதலில் ஒரு ‘சான்ஸ்’ கொடுத்தால், இந்தமாதிரி பண்ணி விட்டீர்களே? என்னமோ போங்கள், இன்னொரு முறை ரேடியோவில் பாடுவதற்கு வழி வைத்துக் கொள்ளவில்லை!” என்று மேலே மேலே பேசிக் கொண்டே போனார். அவரிடமிருந்து தப்பித்துக் கொண்டு வருவதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு என்னைத் தூக்கி வாரிப் போடும்படியான ஒரு செய்தி வந்தது. அது ரேடியோ நிலையத்திலிருந்து மீண்டும் எனக்கு அழைப்பு வந்ததுதான். என்னதான் இருந்தாலும் நம்முடைய சாதகத்திற்கு மதிப்பு இல்லாமலா போய்விடும் என்று கர்வப்பட்டுக் கொண்டேன். உடனே அந்த அழைப்பை ஏற்றுக்கொண்டு ரேடியோ நிலையத்தை அடைந்தேன்.

குறிப்பிட்ட நேரத்தை எதிர்பார்த்தவாறு எனக்காகக் கொடுக்கப்பட்டிருந்த ஆசனத்தில் அமர்ந்திருந்தேன். இரண்டு மூன்று பேர் எனக்கு முன்னால் காத்திருந்தனர். சற்று நேரத்திற்கெல்லாம் ஒருவர் வந்து, “வாருங்கள், ஸார்!” என்று எங்கள் அனைவரையும் அழைத்துப் போனார். பேசாமல் எழுந்து இயந்திரத்தைப்போல் அவரைப் பின்தொடர்ந்து சென்றோம். எனக்கு ஒன்றும் புரியவில்லை. என்ன வெல்லாமோ எண்ணிக் கொண்டு உள்ளே நுழைந்தேன்.

கணீரென்ற குரலில் நிகழ்ச்சி அறிவிப்பவர், “அடுத்தபடியாகப் பிரபல டாக்டர் டண்டன் இருமலைப் பற்றித் தக்க உதாரணங்களுடன் ஒரு சொற்பொழிவு ஆற்றுவார்!” என்று சொல்லி விட்டு, என்னுடன் வந்திருந்தவர்களின் காதோடு காதாக ஏதோ சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியாக என்னிடம் வந்து “ஸார்! நீங்களும் டாக்டர் சைகை செய்யும் போதெல்லாம் தயங்காமல் இருமுங்கள்!” என்றார்.

அவ்வளவுதான்; அடுத்த நிமிஷம் நான் பிரக்ஞை இழந்து தரையிலே விழுந்தேன்.

## விளம்பர யுக்தி!

அமெரிக்கப் பத்திரிகைகளில் ஒரு சமயம் பின்வருமாறு ஒரு விளம்பரம் காணப்பட்டது:—

“பார்வைக்கு அழகாக உள்ள ஒரு கோடீசுவர வாலிபனுக்கு மணப் பெண் தேவை. ‘அழகி’ என்ற நாவலின் கதாநாயகி மாதிரி லட்சணங்கள் பொருந்தி யிருக்க வேண்டும்.”

பலன்:—விளம்பரத்தில் குறிப்பிட்ட ‘அழகி’ என்ற நாவலின் பிரதிகள் இருபத்து நான்கு மணி நேரத்தில் பல்லாயிரக் கணக்கில் விற்பனையாகி விட்டன!

# ஆட்டக்காரர் விரும்புவது

கணநேரத்தில் கையும் கண்ணும் குறிதவறாமல் இருக்கவும், பூரணப் பொருத்தமான வலிவுடனிருக்கவும் வேண்டிய சமயங்களிலெல்லாம் முதலில் விரும்பப்படுவது டீ தான்.

ஒவ்வொரு விளையாட்டிலும் தலைசிறந்து நிற்போர் இவ்வுண்மையை அறிந்து டீ அருந்துவதையே பிரதானமாகக் கொண்டது தற்செயலாக ஏற்பட்டதல்ல. முதலாவதாக தாகத்தைப்பூரணமாக தணிக்கவல்லது டீ. மேலும் குறித்த வேலையில் ஒருமுகமாக கவனம் செலுத்த உதவுவதால் ஊக்கத்தை அதிகரிக்கிறது. கடைசியாக எக்கெடுதியும் செய்யாதது.



"கடினமான ஆட்டத்துக்குப் பிறகு முதன்மையானது"

ஹஸாரே

"கிரிக்கெட் ஆட்டத்தில் புகழ்பெற விரும்புவோர் அதிகமாக டீ அருந்தவேண்டும்"

முஷ்டக் அலி



"ஆடுவதற்கு முன்பும், ஆடிய பிறகும் ஒருகப் டீ அருந்துவதால் நன்மையுண்டு"

ஸர்தார் ஹர்பாயல் ஸிங்



"டீயைத்தவிர வேறு எந்த பானத்தையும் சிபாரிசு செய்ய முடியவில்லை"

தாஜ் முகமத்

"என் கட்சியைப் போலவே டீயையும் விரும்புகிறேன்"

அனில் டே.



"ஆட்டங்களுக்கிடையில் ஒருகப் டீ அருந்தினால் எத்தகைய புத்துணர்ச்சி"

கேவல் முகமத்

"விறுவிறுப்பான டென்னிஸ் விளையாட்டில் டீ தான் எனக்குப் பிரியமான பானம்"

இப்திகார் அகமது






"தண்ணீரை விட்டு வந்ததுடன் ஒரு கப் டீ எப்பொழுதும் அருந்துகிறேன்"

பி. கே. கோஷ்



"பலம் குறையாமல் இருக்க உதவும் சிறந்த பானம், எந்த ஆட்டக்காரருக்கும் இன்றியமையாதது"

ஜானகி தாஸ்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது

IN 259 A TM




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84 W

# மைப் பயல்!

ஸோமாஸ்

"நம்முடைய 'செட்'டே அபூர்வமானதுதான்! அதிலே ஒருத்தன் கூடச் சோடையாய்ப் போய்விடவில்லை. எல்லாருமே முன்னுக்கு வந்து விட்டார்கள்!" என்றார் வக்கீல் சிவா.

"அதில் சந்தேகம் என்ன? நம்ம 'கோட்டு' மணி—'பாங்கர்' மணியாகி விட்டான். மார்ச்சு—செப்டம்பர் என்று மாறிமாறிப் பரீட்சையை முற்றுகையிட்ட எம். எஸ். எம். பத்மநாபன், இன்ஜினியர் பத்மநாபனாகிவிட்டான். பயில்வான் பரசுராமன் புரொபஸர் பரசுராமனாகி விட்டான்!" என்றார் டாக்டர் கங்காதரன்.

'டக், டக்' என்று வாசற் கதவை யாரோ இடிக்கும் சத்தம் கேட்டது. வக்கீல் சிவா போய்க் கதவைத் திறந்தார். "நமஸ்காரம்!" என்று கூறிக் கை கூப்பியபடியே ஒருவர் உள்ளே நுழைந்தார். அவர் கூடத்துக்கு வந்ததும் எல்லோரும் அவரையே உற்றுப் பார்த்தனர்.



"என்னைத் தெரியவில்லையா, சிவா?" என்று கேட்டுக் கொண்டே கூடத்தில் விரித்திருந்த விரிப்பில் உட்கார்ந்தார் வந்த ஆசாமி.

"தெரியவில்லையே!" என்று சந்தேகத்துடன் விழித்தார் வக்கீல் சிவா.

"ஹாஸ்டலில் 48-ம் நெம்பர் அறையில் சேர்ந்து படித்தோமே, ஞாபகம் இல்லையா?" என்று கேட்டார் வந்த பேர்வழி.

"ஓ! 'அரட்டை'க் கண்ணனா? பார்த்து ரொம்ப நாளாச்சு! இல்லையா? அது இருக்கட்டும். இப்போது நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"நான் போலீஸில் இருக்கிறேன். ஸி. ஐ. டி. இலாக்காவில் உத்தியோகம்!"

"நம்ம 'செட்'டில் ஸி. ஐ. டி.யும் ஒருவர் இருக்க வேண்டியதுதான். நம்ம வழக்குகளைத் தீர்த்து வைப்பதற்கு வக்கீல் ஒருவர் இருக்கிறார்; சண்டைகளைத் தீர்த்து வைப்பதற்குப் பயில்வான் ஒருவர் இருக்கிறார்; பண உதவி செய்வதற்கு 'பாங்கர்' ஒருவர் இருக்கவே இருக்கிறார்!' என்றார் டாக்டர் கங்காதரன்.



"ஏன் அப்பா, உன்னைச் சேர்த்துக் கொள்ளவில்லை? வியாதிகளைத் தீர்த்து வைக்க நீ ஒரு டாக்டர் இல்லையா?" என்று கேட்டார் பயில்வான் பரசுராமன்.

"ஆமாம்; அதுவும் சரிதான்!" என்று டாக்டர் கங்காதரன் கூறிக்கொண்டே கைக் கடிகாரத்தைப் பார்த்து "மணி ஏழாகி விட்டது!" என்றார்.

"விருந்து ஏற்பாடுகள் எல்லாம் நடந்து தயாராயிருக்கின்றன!" என்று கூறிக்கொண்டே எழுந்து எல்லோரையும் உள்ளே அழைத்துச் சென்றார் வக்கீல் சிவா. விருந்து சாப்பிட்டு முடிந்து எல்லோரும் கூடத்துக்கு வந்து தாம்பூலம் தரித்துக் கொண்டனர்.

"இன்றைய விருந்தில் கண்ணன் எதிர்பாராதவிதமாகச் சேர்ந்து கொண்டது தான் ரொம்ப விசேஷம்!" என்றார் வக்கீல் சிவா.

"இத்தனை நாட்களாகச் சேலத்தில் ஸி. ஐ. டி.யாக இருந்தேன். இங்கு மாற்றலாகி வந்து ஒரு வாரமாகிறது. வக்கீல் சிவா என்ற பெயரைக் கேட்டதும் உன்னைப் பார்க்க வேண்டும் என்று ஒரே ஆவல் உண்டாகிவிட்டது. தற்செயலாக இன்று இங்கு வந்து சேர்ந்தேன்!" என்றான் கண்ணன்.

"சரி, நான் உத்தரவு வாங்கிக் கொள்கிறேன். ஒன்பது மணிக்கு ஒரு கேஸுக்குப் போகவேண்டும். மணி ஆகியிருக்கும் போல் தோன்றுகிறதே!" என்று கூறிக்கொண்டே கைக் கடிகாரத்தைப் பார்த்தார் டாக்டர். என்ன ஆச்சரியம்! கைக் கடிகாரத்தைக் காணவில்லை.

"கைக்கடிகாரத்தைக் காணோமே!" என்று கூறும்போதே டாக்டர் கங்காதரன் குரலும் கம்மிவிட்டது.

"அட, என் பர்ஸைக் காணோமே?" என்று இன்ஜினியர் பத்மநாபன் பரிதவித்தார்.

சட்டைப் பையில் கையைவிட்டுக் கொண்டே "என் வெள்ளிப் பொடி டப்பியும் போய் விட்டது!" என்று அசட்டுக் களையுடன் கூறினார் பயில்வான் பரசுராமன்.

"என்ன? நிஜமாகவா? இல்லை, விளையாடுகிறீர்களா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் கண்ணன்.



"நிஜமாகத்தான் காணாமற் போய் விட்டன. ஒருவரும் விளையாடவில்லை. சரி, நீதான் ஸி. ஐ. டி. ஆயிற்றே?

"இந்த அதிசயத் திருட்டுகளைக் கண்டு பிடி, பார்க்கலாம்!" என்றார் வக்கீல் சிவா.

"டாக்டர் ஸார் நாம் எல்லோரும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த போது உங்கள் கைக்கடிகாரம் இருந்தது. இல்லையா? நீங்கள்கூட மணி பார்த்தீர்களே!" என்றான் கண்ணன்.

"ஆமாம்!" என்றார் டாக்டர்.

"கூடத்தில் நாம் எல்லோரும் நெருக்கமாகத்தான் உட்கார்ந்திருந்தோம். வேறுயாரும் வரவில்லை, சாப்பிடும் இடத்திலும் நம்மைத் தவிர யாரும் வரவில்லை......" என்று கண்ணன் மேலே பேசுவதற்குள் வக்கீல் சிவா, "அப்படியானால் நமக்குள் தான் ஒருவர்......!" என்றார்.



"தயவு செய்து என்மீது ஒருவரும் கோபித்துக் கொள்ளக் கூடாது. நான் எல்லோரையும் சோதனை செய்ய விரும்புகிறேன்! போலீஸ் அதிகாரி ஒருவருடன் இந்தச் சோதனையை நடத்த வேண்டும். ஏனென்றால் இந்தத் திருட்டு மிகவும் அதிசயத் திருட்டாயிருக்கிறது! திருட்டில் சம்பந்தப்பட்ட ஒவ்வொருவரும் அந்தஸ்துள்ள மனிதராயிருக்கிறார்கள். ஆகையால் வாசற் கதவை வெளிப்புறம் தாளிட்டுக் கொண்டு நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று இன்ஸ்பெக்டரை அழைத்து வருகிறேன். சற்று நேரம் பொறுத்திருக்க வேண்டும்!" என்று கூறி விட்டுக் கண்ணன் வாசற் கதவைத் தாளிட்டு விட்டு வெளியே சென்று விட்டான்.



கடைக்காரன் :— என்னதோ பேசீரே— அதெல்லாம் எனக்குத் தெரியாது. அந்த ஒரு குல்லா தான் இங்கே இருக்கிறது.

வாங்கவந்தவர் :— அது சரி ஐயா! கண்ணுக்குத் துவாரம் வைத்ததாக இன்னொரு குல்லா இருக்கிறதா என்று கேட்கிறேன்.

அரை மணி ஆயிற்று; ஒரு மணி ஆயிற்று. இரண்டு மணி நேரமும் கழிந்தது. போன ஆசாமி வருகிறபாடாக இல்லை. 'கண்ணன் வரக் காணோமே' என்று பாடிக் கூடப் பார்த்தார்கள். ஊஹூம்! கண்ணன் வரவில்லை. அவர்கள் பொறுமையை இழந்து விட்டனர். வேறொருவர் உதவியைக் கொண்டு வாசற் கதவைத் திறந்து போலீஸ் ஸ்டேஷனுக்கு எல்லோருமாகச் சென்றனர். இன்ஸ்பெக்டரைக் கண்டு விஷயத்தைக் கூறினார்கள்.

முழு விவரங்களையும் கேட்ட இன்ஸ்பெக்டர் "கண்ணன் என்ற பெயருடன் ஸி. ஐ. டி. இலாகாவில் ஒருவரும் இல்லையே! உங்களை எவனோ களவாணிக் கலையில் கைதேர்ந்த நிபுணன் ஒருவன் ஏமாற்றியிருக்கிறான்" என்று கூறிவிட்டுத் தம் மேஜை அறையிலிருந்து ஒரு கட்டுப் போட்டோப் படங்களை எடுத்து அவற்றை டாக்டரிடம் கொடுத்தார்.

"இந்தப் போட்டோக்களில் ஏதாவது ஒன்றில் உங்கள் கண்ணன் இருக்கிறானா பாருங்கள்!" என்றார் இன்ஸ்பெக்டர்.

போட்டோக்களை ஆராய்ச்சி செய்து கொண்டே வந்த போது அதில் கண்ணன் அகப்பட்டுக் கொண்டான்.

"இவன்தான் அந்த ஸி. ஐ. டி. கண்ணன்!" என்று எல்லோரும் ஏக காலத்தில் ஆச்சரியத்துடன் கூவினார்கள்.

"சரி, சரி. இவன் வேலைதானா அது? இவனுக்குத்தான் நாங்கள் 'யமப்பயல்' என்று பெயர் வைத்திருக்கிறோம். எங்கள் வலையில் சிக்காத ஆசாமி இவன் ஒருவன் தான்!" என்று கூறினார் இன்ஸ்பெக்டர்.

"சரிதான். எங்கள் 'செட்டில்' யாரும் சோடையில்லை. கண்ணனும் பலே பேர்வழிதான்!" என்று கூறினார் டாக்டர்.




# யசோதரா


ஆசிரியர்: விச்வம்பரநாத் கௌசிக்

மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்


யசோதரா சென்ற பின், ராமநாத பாபு சில நிமிஷங்கள் யோசனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு தனக்குத்தானே சிரித்துக் கொண்டு. "அப்படியா சமாசாரம்! எனக்கு முன்னாலேயே தெரியுமே!" என்று முணுமுணுத்துக்கொண்டே ஒரு ஆங்கில நாவலை எடுத்து வைத்துக்கொண்டு, படிக்க உட்கார்ந்தார். ஆனால் படிப்பில் மனம் நாடவில்லை. புஸ்தகத்தை மூடி வைத்துவிட்டு யசோதரா போன வழியை உற்று நோக்கலானார். பிறகு ஏதோ யோசித்தவாறு எழுந்து சோம்பல் முறித்துவிட்டுப் புறப்பட்டார். நேரே தாயின் பூஜை யறை வாசலில் போய் நின்றார். தாயார், முற்றத்தில் உள்ள துளசிச் செடிக்குப் பூஜை செய்து கொண்டிருந்தாள். ராமநாதபாபு வந்து நிற்பதைக் கண்ட அவள், "ராமு! ஜஸ்ஸோவுக்கு ஹிந்தி படிக்க வேணுமாம். எத்தனையோ தடவை சொல்லிவிட்டாள். ஒரு அரிச்சுவடிப் புத்தகம் வாங்கிக் கொடு. சம்பா சொல்லிக் கொடுப்பாள்" என்றாள்.

ராமநாதபாபு மகிழ்ச்சியுடன் திரும்பி, 'சம்பாவிடம்தான் அரிச்சுவடிப் புத்தகம் இருக்குமே!'' என்றார்.

"அது இன்னுமா இருக்கும்! அது கிழிந்துபோய் எத்தனையோ நாளாய் விட்டதே!"

அதே சமயம் அங்கு வந்த சம்பாவதி, "அண்ணா! ஒரு அரிச்சுவடிப் புத்தகமும், ஒரு முதல் பாடப் புத்தகமும் வாங்கிக் கொடு" என்றாள்.

ராமநாதபாபு புன்முறுவலுடன், "உன்னுடைய புஸ்தகத்தை என்ன செய்தாய்?" என்றார்.

"அது அப்பொழுதே ஏடு ஏடாய்ப் போய் விட்டதே!"

"நீ எத்தனை புஸ்தகங்களைக் கிழித்து விட்டாய் தெரியுமா?"

"இப்பொழுதெல்லாம் என் புஸ்தகங்கள் எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா?" என்றாள் சம்பா.

"ரொம்ப அழகாகத்தான் இருக்கிறது! ஒரு புஸ்தகமாவது முழுசாய் இருந்தால் தானே!"

சம்பாவதி சிறிது வெட்கமுற்று, "ஆமாம், போ அண்ணா, உன் புஸ்தகங்களையெல்லாம் நான் தினந்தோறும் அடுக்கி வைக்கிறேன்! என் புஸ்தகங்களை ஒழுங்காக வைத்துக் கொள்ளாமலா இருப்பேன்!" என்றாள்.

"ஏன் ராமு, குழந்தையைப் பரிகாசம் செய்கிறாய்? அவள் குழந்தைதானே! நீ இவ்வளவு பெரியவனாகப் போய்விட்டாய். இங்கிலீஷ். ஹிந்தி, பார்ஸி என்னவெல்லாமோ படிக்கிறாயே! உனக்குப் புஸ்தகம் வைத்துக் கொள்ளத் தெரிந்து போய் விட்டதா? ஒரு நாளைக்கு உன் அறைக்குப் போயிருந்தேன். எங்கே பார்த்தாலும்

புஸ்தகமும் காகிதமும் குவிந்து கிடந்தது. இருக்கிற நாற்காலி மேல் எல்லாம்கூடப் புஸ்தகமும் பேப்பருமாகக் கிடந்தது. எங்கே உட்காருகிறது, வருகிறவர்கள்? நீயே அப்படி இருந்து கொண்டு, சேற்றுக் குழந்தையை இப்படிப் பரிகாசம் செய்கிறாயே என்று பிருக்கிறதா?" என்றாள் தாயார்.

இப்பொழுது சம்பாவதிக்குப் பலம் கிடைத்தது. "அம்மா! தினம் நான் தான் அண்ணா புஸ்தகத்தை எல்லாம் அடுக்கி வைக்கிறேன். இல்லா விட்டால் வருஷக் கணக்காக அப்படியேதான் அம்மா கிடக்கும்" என்று முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடக் கூறினாள்

"அந்த உபயோகமற்ற ஹூரத்காரி என்ன செய்கிறான்? அவனுக்கு இதை யெல்லாம் செய்ய வேண்டுமென்று என்னமோ, புத்தியோ கிடையாது! எனக்கு அவனைக் கண்டாலே பிடிக்கிறதில்லை" என்றாள் தாயார்.

"அவன் என்ன செய்வான், அம்மா? அண்ணா ஒன்றுமே சொல்வதில்லை?" என்றாள் சம்பாவதி.

"நல்ல வேலைக்காரன், போ! இதுமாதிரி இருந்தால் எனக்குப் பிடிக்கவே பிடிக்காது" என்று சொல்லிக் கொண்டே, தாய் பூஜை அறைக்குப் போய்விட்டாள். தாய் சொன்னது என்னவோ, உண்மைதான். ராமநாதபாபு ஒன்றும் பதில் பேசாமல் "என்னவோ நீ அதிகப் பிரசங்கித்தனமாகப் பேசுகிறாயே! உன் புஸ்தகங்களை எல்லாம் எப்படி வைத்திருக்கிறாய்! காட்டு பார்க்கலாம்" என்றார் சம்பாவதியிடம்.

"வா, வந்து பாரு!" என்று கூறி ராமநாதபாபுவை அழைத்துக்கொண்டு தன் அறைக்குப் புறப்பட்டாள் சம்பாவதி. சம்பாவதி தன் அறைக்குச் சென்றதும், அலமாரியைத் திறந்து காட்டி "பாரேன்! எப்படி வைத்திருக்கிறேன்" என்று கூறினாள்.

அலமாரியின் மேல் தட்டில் ஹிந்திப் புஸ்தகங்கள் வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. கீழ்த் தட்டில் பேனா மைக்கூடு காகிதங்கள் முதலியன ஒழுங்காக வைக்கப்பட்டிருந்தன.

"எப்படி வைத்திருக்கிறேன், பார்த்தாயா?" என்று கேட்டாள் சம்பாவதி.

"என்னவோ நாலே நாலு புத்தகத்தை வைத்துக்கொண்டு அடுக்கி வைத்திருக்கிறேன் என்று பீற்றிக் கொள்கிறாயாக்கும். இது ஒரு கஷ்டமா?" என்று கேட்டார் ராமநாதபாபு.

"கஷ்டம் என்று எப்பொழுது நான் உன்னிடம் சொன்னேன்!"

"சொன்னால் என்ன, சொல்லாவிட்டால் என்ன? ஆமாம்—உன்னிடத்திலே வேறே என்ன என்ன இருக்கிறது? காட்டு பார்ப்போம்!" என்றார் ராமநாதபாபு.

"என்னிடத்தில் வேறு என்ன இருக்கிறது, காட்டுவதற்கு?"

"ஏன் இல்லை? அந்த அலமாரியில் என்ன இருக்கிறது?"

சம்பாவதி புன்முறுவலுடன், "அதிலே ஒன்றும் இல்லை" என்றாள்.

"ஒன்றும் இல்லையா? திறந்து காட்டு."

"அதிலே துணிமணிகள் இருக்கின்றன."

"யாருடையது, உன்னுடையதா?"

"ஆமாம்; என்னுடையதுதான்."

"சரி, பார்ப்போமே!" என்று கூறிய வண்ணம் அந்த அலமாரியை நெருங்கினார் ராமநாதபாபு.

"அண்ணா! அதைத் திறக்கப்படாது."

ராமநாதபாபு அவளுடைய வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே அலமாரியைத் திறந்துவிட்டார். அதில் பொம்மைகள், அதற்கான உடுப்புகள், நாற்காலிகள், மேஜைகள், பாத்திரங்கள் முதலிய விளையாட்டுச் சாமான்களாகவே இருந்தன. அவைகளைப் பார்த்து ராமநாதபாபு சிரித்துக் கொண்டே "ஏன் சம்பா, நீ இவ்வளவு பெரியவளாகப் போன பிறகும் பொம்மையை வைத்துக் கொண்டு விளையாடுகிறாயா?" என்று கேட்டார்.

சம்பாவதியின் சிவந்த முகம்வெட்கத்தினால் இன்னும் அதிகமாகச்



வந்து விட்டது. அவள் தலையைக் னித்தபடியே "இப்பொழுது எல்லாம் ங்கே விளையாடுகிறேன்?" என்றாள்.

"அப்படியானால் இதை யெல்லாம் என் வைத்துக் கொண்டிருக்கிறாய்?"

"என்ன செய்கிறது? சும்மா, விட் டெறிந்து விடுகிறதா?"

"புக்ககத்துக்கு எடுத்துக் கொண்டு போகிறதற்காக வைத்திருக்கிற யாக்கும்— மியாருக்கு விளையாடக் கொடுப்பதற்கு!"

சம்பாவதி ஒன்றும் பதில் பேசாமல் வமாரிக் கதவை மூடலானாள். அதே மயம் ராமநாதபாபுவின் பார்வை அறைக் தவைத் தாண்டி, முற்றத்திற்குப் பாய்ந் து. யசோதரா ஸ்நான அறையிலிருந்து ளித்துவிட்டு வந்து கொண்டிருந்தாள். வள் ஒரு வெள்ளைத் துணி உடுத்தியிருந் தாள். அவளது தலைமயிர் அவிழ்ந்தபடி ருந்தது. அவளது அழகிய முகத்தில், நானம் செய்திருந்ததனால் தனிச்சோபை காணப்பட்டது. அந்த எழிலுருவத்தைக் ண்ட ராமநாதபாபு பிரமித்து விட்டார்.

தற்செயலாக யசோதராவின் அகன்ற ரக் கருவிழிகள் ராமநாதபாபுவைக் வனித்து விட்டன. ஒரு கணத்தில் மான்



போல ஓடி மறைந்தாள். அவள் ஓடியது மின்னல் மின்னி மறைந்தது போலிருந்தது. ராமநாதபாபு தன் கண்களைச் சிறிது நேரம் மூடிக் கொண்டார். அவர் இப்படிக் கண்ணை மூடிக் கொண்டிருக்கும் பொழுது, சம்பாவதி, "வா, அண்ணா! சமையல் ஆகியிருக்கும்; சாப்பிடப் போவோம்" என்றாள்.

ராமநாதபாபு திடுக்கிட்டு, தூங்கி விழித்தவர்போலக் கண்ணைத் துடைத்துக் கொண்டு, "அப்பா சாப்பிட்டுவிட்டாரோ?" என்று கேட்டார். "தெரியாது. போய்ப் பார்க்கிறேன்" என்று கூறிச் சம்பாவதி போய்விட்டாள். சிறிது நேரம் கழித்துத் திரும்பி வந்து, "அப்பா, இப்பொழுதுதான் குளித்துக் கொண்டிருக்கிறார்" என்றாள்.

"அப்படியானால், அவர் முன்னால் சாப் பிடட்டும். அப்புறம் என்னைக் கூப்பிடு" என்று கூறிவிட்டுத் தனது அறைக்குச் சென்று விட்டார்.

தனது அறையை அடைந்ததும், ஹரத் வாரியைக் கூப்பிட்டு, ஒரு காகிதத்தில் அரிச்சுவடியும் முதற் புத்தகமும் வேண்டு மென்று எழுதி கடைக்குப் போய் உடனே வாங்கி வருமாறு கட்டளையிட்டார்.

இந்தச் சம்பவம் நடந்து ஒரு வாரம் சென்றுவிட்டது. இதன் மத்தியில் யசோதராவும் ராமநாதபாபுவும் ஒருவரை யொருவர் அதிகமாகச் சந்திக்கவே இல்லை. ராமநாதபாபுவைத் தனிமையில் சந்திக்கு மனவு, யசோதராவுக்குத் துணிவு ஏற்படா ததே இதற்குக் காரணம். அதனால் அவள் அம்மாதிரித் தனிமையில் சந்திக்கக்கூடிய நிலைமை ஏற்படாதவாறு கவனித்து வந்தாள். அவரது அறையைச் சுத்தம் செய்யப் போகும் பொழுதெல்லாம் அவளது நங்கை சம்பாவதியுடன் போவாள். இல்லையேல், அவர் உலாவப் போயிருக்கும் சமயத்தில் போவாள்.

ராமநாதபாபுவும் அவளைத் தனிமையில் சந்திப்பதற்காக முயற்சி எடுத்துக் கொள்ள வில்லை. அவர் படித்தவர். நன்னடத்தை யுள்ளவர். ஆகையினால் யசோதராவைத் தனிமையில் சந்திப்பதை அவ்வளவு உசித மாக நினைக்கவில்லை. தான் யசோதராவைக் காதலிப்பது தாய் தந்தையர் அறிந்து கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்ற பயம் வேறு. இவ்வளவிற்கும் மத்தியில் அவரது உள்ளம் சில சமயங்களில் யசோத ராவைப் பார்க்க வேண்டுமென்று துடி

யாய்த் துடிக்கும். ராமநாதபாபு ஒன்றும் புரியாமல் தவிப்பார்.

மாலை நேரம், ராமநாதபாபு தனது வீட்டுத் தோட்டத்தில், பசும்புல் தரையில் உட்கார்ந்து அன்றைய தினசரிப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தார். அந்தச் சமயம் "ஹலோ, ராம்நாத்!" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தார். பார்த்ததும் எழுந்து நின்று, புன்முறுவலுடன், "ஹலோ விராஜ கிசோரா? எப்பொழுது வந்தாய்?" என்றார்.

விராஜ்கிசோர் ராமநாதபாபுவின் நெருங்கிய சிநேகிதர். அவரது தந்தை லக்னோவில் டிப்டி கலெக்டர். இதற்கு முன்னால் அவர் சில வருஷம் இதே நகரத்தில் டிப்டி கலெக்டராய் இருந்தார். அப்பொழுது தான் ராமநாதபாபுவுக்கும் விராஜகிசோருக்கும் சிநேகிதம் ஏற்பட்டது. விராஜகிசோரின் வேட்டகம் இந்த ஊரில்தான் இருந்தது.

"இன்று காலையில்தான் வந்தேன்" என்றார் விராஜகிசோர்.

"அப்படியா! உட்காரு" என்று சொல்லி விட்டு, ராமநாதபாபு "நந்து" என்று கூப்பிட்டார்.

நந்து என்பது யசோதாவின் தம்பியின் பெயர். அவன் வந்ததும், "வெற்றிலைப் பாக்குப் பெட்டி கொண்டுவா" என்றார்.

நந்து சிறிது நேரத்திற்கெல்லாம் வெற்றிலைப் பெட்டியை கொண்டுவந்து வைத்தான். வெற்றிலை போட்டுக் கொண்டபின் விராஜகிசோர் "இவன் புது ஆள்போலிருக்கிறதே! ஹரத்வாரி போய் விட்டானா என்ன?" என்று கேட்டார்.

"இல்லை, அவனும் இருக்கிறான். இவன் புது வேலைக்காரன். அதிருக்கட்டும். இப்பொழுது நீ என்ன செய்து கொண்டிரு கிறாய்?"

"ஒன்றுமில்லை, சும்மாதான் இரு கிறேன். பி. ஏ. முடிவு இன்னும் தெரிய வில்லையே?—நீ பாஸ் ஆகி விடுவாயோ இல்லையோ?" என்றார் விராஜகிசோர்.

"நம்பிக்கை இருக்கிறது. அதிருக்கட் டும், எப்படி இருக்கிறதோ!"

"வேறு ஏதாவது விசேஷமுண்டா? பார்த்து ஒரு வருஷமாய் விட்டது இல்லையா?" என்று கேட்டார் ராமநாதபாபு.

"இங்கே விட்டுப் போனபிறகு மனசுக்குக் 'குஷி'யே இல்லையப்பா!"

"எனக்கும் அப்படித்தான். நீங்கள் எல் லாம் போனபின் வீட்டிலேயே அடைந்து கிடக்க வேண்டியிருக்கிறது? எனக்கும் என் னவோ மாதிரித்தான் இருக்கிறது!"

"ஆமாம், உனக்கு எப்பொழுது கல்யா ணம்? எங்கேயாவது பேச்சு வார்த்தை நடக்கிறதா?"

"இப்பொழுதே எதற்கு கல்யாணம் செய்து கொள்ளுகிறது!"

"அப்படியானால் கிழவனானபின் தான் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாயா?"

"என்ன பரிகாசம் செய்கிறாய்! இப் பொழுதே, இது மாதிரிக் குருட்டுக் கல்யா ணம் செய்து கொள்ள நான் தயாராயில்லை."

"குருட்டுக் கல்யாணமா? அது என்ன அப்பா அது? புதுசாகச் சொல்லுகிறாயே!"

"நம் ஹிந்து சமூகத்திலே நடக் கிறதே. அதைத்தான் சொல்கிறேன். கணவனாகப் போகிறவனுக்கு, வரப்போகும் மனைவி எப்படி இருப்பாள் என்பது தெரி யாது! மனைவிக்குக் கணவனைப் பற்றித் தெரியாது!"

## தலைக்கு வந்த ஆபத்து



"நம்ம வீட்டுச் சொந்தக்காரர் உண்டே, ஆவிரத்தில் ஒரு மனுஷர்!"



"நமக்கு இது வரையில் தோட்டமே கொடுக்கவில்லை. பார்த்தாயா?"



"ஐயையோ, இதென்ன அதோ அவர்தான் வருகிற போல் இருக்கிறது!"

"அதற்கென்ன? நீ தெரிந்துகொண்ட பின் செய்துகொள்வேன்."

"அதெப்படி முடியும்? அம்மா—அப்பா இருக்கிறபொழுது, நான் பார்க்கிறதா?"

"போட்டோவையாவது பார்க்கலாமோ, இல்லையோ?"

"போட்டோவைப் பார்த்து எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? போட்டோவிலே, அழகில்லாதவன்கூட அழகாகத் தான் தோன்றுகிறான்."

"அப்படியானால் என்ன செய்கிறது? முதலில் காதல் ஏற்படவேண்டும். பின்னால் கல்யாணம் நடக்க வேண்டும் என்று தோன்றுகிறது? அப்படித்தானே!"

"அதில் என்ன சந்தேகம்? காதல் மணம் தான் எல்லாவற்றையும்விட உயர்ந்தது. ஆனால் இந்தியர்களாகிய நமக்கு அந்தப் பாக்யம் ஏது? இங்கெல்லாம், காதல் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, கல்யாணம் ஆகிவிடுகிறது."

"ஆனால் என்ன! போகப் போகத்தான் இருவருக்கும் அன்பு ஏற்பட்டுவிடுகிறதே!"

"அதை அன்பு என்று சொல்லக்கூடாது. ஒருவிதமாக சகித்துக் கொண்டு போகிறோம் என்று வேண்டுமானால் சொல்லலாம்."

"அப்படியா? அது கிடக்கட்டும். உன் விஷயம் என்ன?" என்று கேட்டார் விராஜகிசோர்.

"எனக்கு என்ன தெரியும்?"

"அப்படியானால், அப்பா அம்மா யாரைச் சொல்கிறார்களோ, அவளைக் கல்யாணம் செய்து கொண்டு விடுவாயா?"

"ஆமாம். அவர்கள் சொல்வதைக் கேட்டுத் தானே ஆகவேண்டும். ஆனால்......"

"ஆனால்......என்ன?"

ராமநாதபாபு புன்முறுவலுடன் "ஒன்றும் இல்லை" என்றார்.

"மறைக்கிறாய்; ஏதோ இருக்கிறது!"

"ஒன்றும் இல்லை. ஏதோ வாய் தவறி வந்துவிட்டது."

"அந்த ஏமாற்றம் எல்லாம் என்னிடம் வேண்டாம். அதற்கு வேறு யாரையாவது பார். உன் ஒவ்வொரு விஷயமும் எனக்குத் தெரியும். சும்மா சொல்லு."

"சொல்வதற்கு ஏதாவது இருந்தால் தானே சொல்லலாம்."

"நீ இப்படிப் பேசுகிறதுதான் எனக்குப் பிடிக்கிறதில்லை. உனக்கும் எனக்கும் என்ன ஒளிவு-மறைவு வேண்டிக் கிடக்கிறது! என்னிடமே இப்படி விஷயத்தை மறைக்கிறாயே!"

"இல்லை விராஜகிசோர்! உன்னிடம் மறைத்துவிட்டு வேறு யாரிடம் சொல்லப் போகிறேன்? சொல்லக் கூச்சமாயிருக்கிறது. அதனால்தான்......"

"கூச்சமாயிருக்கிறதா? பெண்ணாய்ப் பிறந்திருக்கணும் அப்பா, நீ தவறிப்போய் பிள்ளையாய்ப் பிறந்துவிட்டாய்! பெண்ணாய்ப் பிறந்திருந்தால் நல்ல இடத்திலே கல்யாணமாவது ஆகி யிருக்கும்!"

"கிசோர்! பரிகாசம் என்ன வேண்டிக் கிடக்கிறது! வந்து—இந்தப் புதிய வேலைக்காரன் நந்து இருக்கிறானே......"

"ஆமாம்! இருக்கிறான்."

"அவனுக்கு ஒரு பெண் இருக்கிறாள்."

"ஓகோ! அப்புறம்?"-சிறிது புன்முறுவ லுடன் விராஜகிசோர் கேட்டார்.

(தொடரும்)

---

## தலைப்பாகையோடு போயிற்று!




"வீட்டுக்கார ஐயா! வாங்க, சௌக்கியந்தானே? என்ன விசேஷம்?"




"ஒன்றும் இல்லை. தோட்டம் கொரிக்க வந்தேன்!"
"ஐயையோ!!"




"பயப்படாதீர்கள். சும்மா பிஜேஷ தோட்டம் கெடுப்பதற்காக வந்தேன்!"

# அணிலும் எலியும்

மாலு

அந்த வருஷம் நிறைய முந்திரிப் பழங்கள் பழுத்து முந்திரிக் கொட்டைகள் சாப்பிடுவதற்குப் பக்குவமாக இருந்தன. கந்தன் என்ற அணில் ரொம்ப சந்தோஷத்துடன் அந்தக் கொட்டைகளைப் பறித்துத் தன்னுடைய கூர்மையான பற்களினால் முந்திரிப் பருப்பை மட்டும் எடுத்துச் சாப்பிட்டு விட்டு வெறும் ஓடுகளைக் கீழே போட்டுக் கொண்டிருந்தது.

வயிறு நிறைய முந்திரிப் பருப்பைச் சாப்பிட்டு விட்டுத் தன்னுடைய அழகான கண்களால் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தது. மழை காலம் ஆரம்பமாவதற்கு வேண்டிய மப்பும் மந்தாரமுமாக இருந்தது வானம்.

அதைப் பார்த்ததும், 'இப்பொழுதே நாம் மழை காலத்துக்காகக் கொஞ்சம் முந்திரிக் கொட்டைகளைச் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டும்! இல்லாவிட்டால் ரொம்பக் கஷ்டப்பட்டுப் போவோம்!'' என்ற கவலை வந்து விட்டது கந்தனுக்கு.

இந்தச் சமயத்தில், "கந்தா! கந்தா! எனக்கும் இரண்டு முந்திரிக் கொட்டை" என்று கெஞ்சிக் கேட்டது கீழே இருந்த கருப்பன் என்ற எலி.

"நான் என்ன செய்வேன், கருப்பா! இங்கே இருப்பது எனக்கு மட்டுந்தான் போதும்" என்று சொல்லிவிட்டது பேராசை பிடித்த அணில்.

"இரு, உன்னைப் பார்த்துக் கொள்கிறேன்" என்றது கருப்பன்.

"பூ! நீ என்னை ஒன்றும் செய்ய முடியாது!" என்று சொல்லிக் கொண்டே கந்தன் முந்திரி ஓட்டால் கருப்பனை அடித்து விரட்டிவிட்டது.

கருப்பன் போன பிறகு கந்தன் ரொம்ப ரொம்ப சிரமத்துடன் முந்திரிக் கொட்டைகளையெல்லாம் பறித்தது. தன்னுடைய காரியத்தை யாராவது கவனித்துக் கொண்டிருக்கிறார்களா என்று அது சுற்று முற்றும் பார்த்தது. யாரையும் காணோம். "அப்பாடி!" என்ற பெருமூச்சு விட்டுக் கொண்டே எல்லாக் கொட்டைகளையும் கொண்டு போய் அருகிலிருந்த மாமரத்துப் பொந்தில் மழைக் காலத்துக்காகப் பதுக்கி வைத்துவிட்டுச் சென்றது.

கந்தன் எதிர்பார்த்தது போலவே, சில நாட்களுக்குப் பிறகு நல்ல மழை பெய்ய ஆரம்பித்து விட்டது. தான் இருந்த வீட்டு உத்தரத்தின் இருக்கை விட்டு கந்தனால் வெளியே தலை காட்ட முடியவில்லை. அதனுடைய கவனமெல்லாம் மழை காலத்துக்காக மாமரத்துப் பொந்தில் பதுக்கி வைத்திருந்த முந்திரிக் கொட்டைகளின் பேரிலேயே இருந்தது. அந்தக் கொட்டைகளெல்லாம் இந்த மழையில் என்ன கதி அடைந்திருக்குமோ என்று எண்ணிப் பார்த்தபோது, கந்தன்

ஆபத்து, வேண்டாம்!



"டேய் ராமு, நாம் ரயில் விளையாட்டு விளையாடலாம்! வருகிறாயா?"

"வேண்டாம், நான் மாட்டேன். ரயில் விளையாட்டு விளையாடினால், அப்புறம் 'ஸ்டிரைக்' வந்தாலும் வரும்!"

கண்களில் நீர் துளித்தது. அதே கவலையால் அதனுடைய உடம்பு கூடப் பாதியாய் இளைத்துவிட்டதென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

நல்ல வேளையாக, நாலைந்து நாட்களுக்குப் பிறகு மழையும் கொஞ்சம் ஓய்ந்தது. இது தான் சமயமென்று ரோஸ் நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு மாமரத்தை நோக்கி ஒரே ஓட்டமாய் ஓடிற்று.



என்ன ஏமாற்றம்!—வெறும் ஓடுகள் அந்த மாமரப் பொந்திலிருந்து மின்னல் வேகத்தில் வெளியே வந்து விழுந்து கொண்டிருந்தன!

உள்ளே எட்டிப் பார்த்தால் கருப்பன் அவற்றையெல்லாம் காலி செய்து கொண்டிருந்தது!

அணிலுக்கு ஆத்திரம் தாங்கவில்லை; அது "அடேய்!" என்று அதட்டியது தான் தாமதம், கருப்பன் அவசரம் அவசரமாகக் கடைசிக் கொட்டையையும் காலி செய்துவிட்டு, "அன்றைக்கு இரண்டு கொட்டை கேட்டேன்; கொடுக்க மாட்டேன் என்றாயே, இப்பொழுது பார்த்துக் கொள்!—நீ ஒளித்து வைத்தது உனக்கு மட்டும் தான் தெரியும் என்று நினைத்துக் கொண்டாயோ? நானும்தான், அதோ அந்த மரத்தின் பின்னாலிருந்து பார்த்துக் கொண்டிருந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே ஓட்டம் எடுத்தது.

கருப்பன் கொறித்துப் போட்டிருந்த வெறும் ஓடுகளை வெறித்துப் பார்த்துக் கொண்டே ஏமாந்து நின்றது அணில்!

# சமயோசிதம்!

கிருஷ்ணசாமி ஐயங்கார் பிரபலமான வக்கீல். ஒரு சமயம் அவர் எடுத்துக் கொண்ட வெளியூர் கேஸ் ஒன்று தோற்றுப் போகும் போலிருந்தது. அவருக்கு அவமானம் தாங்கமுடியவில்லை.

ஜட்ஜ் தீர்ப்புச் சொல்வதற்கு முன்னால் யாருக்கும் தெரியாமல் ஊருக்குப் போய் விடுவதென்று முடிவு செய்து ஸ்டேஷனுக்கு ஓடினார். நாலு மணிக்கு வரவேண்டிய வண்டி நாலரைக்கு வரும் என்றார்கள்.

கோர்ட்டில் நாலு மணிக்குத் தீர்ப்பு முடிந்து விடும். கட்சிக்காரன் நேரே தம்மைத் தேடிக்கொண்டு ரயிலடிக்கு வந்து, 'என்ன சாமி, இப்படிச் செய்திட்டீங்களே!' என்றால், முகத்தைக்கொண்டு போய் எங்கே வைத்துக் கொள்கிறது? இந்த விதமாகக் கவலைப்பட்டுக் கொண்டு ஓர் இரண்டாவது வகுப்பு டிக்கெட் வாங்கினார். அவனைச் சந்திக்கக் கூடாது என்பதற்காகத்தான் தம் கைப் பணம் போனாலும் போகிறது என்று இரண்டாம் வகுப்பு டிக்கெட்டு வாங்கினார்.



ரயில் புறப்படுகிற சமயம். ரொம்ப அவசரம் அவசரமாக ஒருவர் இரண்டாவது வகுப்பில் ஏறினார். அவர் கட்சிக்காரரேதான்! ஐயங்கார், "இரண்டாவது வகுப்பு! இரண்டாவது வகுப்பு! ஏறாதே!" என்று மன்றாடினார். கட்சிக்காரர் "ஆமாம் சாமி! தெரிஞ்சு தான் ஏறினேன்! இத்தாருங்க மாலை. உங்களால்தான் கேஸ் ஜயிச்சது!" என்றார்.

கேஸ் ஜயித்தது என்றதும் ஐயங்காருக்கு மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. ஆனாலும் அதை வெளியே காண்பித்துக் கொள்ளாமல், "இந்த மாலை மரியாதையெல்லாம் பிடிக்காமல் தானே நான் முன்னால் வந்தேன்!" என்று சொல்லிக் கொண்டே எல்லா மரியாதைகளையும் வெகு தாராளமாக ஏற்றுக்கொண்டார்.











லக்ஸ் டாய்லட் சோப்பின் நுரையை தாராளமாக சருமத்தின் மேல் தடவுகிறேன்...
சுத்தமான, குளிர்ந்த ஜலத்தில் கழுவுகிறேன்.




பின்பு, உலர்ந்த மிருதுவான துண்டினால் முகத்தை துடைக்கிறேன்




LUX
TOILET SOAP


SUNSHINE
Glaxo
ஸன்ஷைன் கிளாக்ஸோ
குழந்தைகளை புஷ்டியாக
வளர்க்கிறது



---


வைரம்
பொன், வெள்ளி
நகைகளுக்கு

# பலிக்கவில்லை!

அந்தப் பொல்லாத, பயங்கரமான இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமான சமயம்.

இந்திய சர்க்கார் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு விதமான அவசரச் சட்டம் பிரயோகித்து வந்தார்கள். இந்திய சர்க்கார் அவ்வாறு பிறப்பித்த அவசரச் சட்டங்களிலே ஒன்று, எதிரிக்கு உபயோகமாயிருக்கக் கூடிய எந்தவிதமான தகவலையும் கொடுக்கக் கூடாது என்பதேயாகும்.

மேற்படி அறிக்கையைப் பார்த்ததும், ஓர் இந்திய சமஸ்தானத்துக்கு மிக்க கவலை உண்டாயிற்று. தன் மூலம் எதிரிக்கு ஏதாவது தகவல் போய்விட்டால் இந்திய சர்க்காரின் மீளாத கோபத்தை யல்லவா சம்பாதித்துக் கொள்ள நேரும் என்று அது அஞ்சிற்று. ஆகவே அதை எந்தெந்த வகையிலெல்லாம் தடுக்கலாம் என்று அது இரவு பகலாக ஆராய்ந்தது.

மறுநாள் காலை அந்த இந்திய சமஸ்தானம் தன்னுடைய கல்வி இலாகாவுக்கு ஓர் உத்தரவு பிறப்பித்தது. அதாவது, பள்ளிக்கூடங்களிலுள்ள இந்திய தேசப் படங்கள் எதிரிக்கு மிகவும் பிரயோஜனமானவை யென்று சமஸ்தான சர்க்கார் கருதுவதால், ஒவ்வொரு நாளும் பள்ளிக்கூடம் முடிந்ததும் மேற்படி படங்களை எடுத்துப் பத்திரமாக ஒரு பீரோவிலோ இரும்புப் பெட்டியிலோ வைத்துப் பூட்டிவிட்டுப் போகவேண்டும் என்பதேயாகும்.

கல்வி இலாகா இந்த உத்தரவுக்கு நகல் எடுத்து, அந்த விசாலமான சமஸ்தானத்திலே உள்ள 13½ பள்ளிக் கூடங்களுக்கும் அனுப்பி வைத்தது.



பன்னிரண்டு ரூபாயும் பத்து ரூபாயும் சம்பளம் வாங்கும் ஏழை உபாத்தியாயர்களுக்கு, சர்க்கார் உத்தரவு என்றால் சொல்லவா வேண்டும்!

அந்த உபாத்தியாயர்களிலே ஒருவர் மேற்படி உத்தரவு கைக்குக் கிடைத்ததும், அன்றே அந்த நிமிஷமே கவலையில் மாட்டப்பட்டு ஒட்டடை படிந்திருந்த அந்த தேசப் படங்களையெல்லாம் எடுத்து ஒரு ஓட்டை பீரோவில் வைத்து மூடி, ஒரு பெரிய பூட்டையும் கடனுக்கு வாங்கிப் பூட்டினார். அவர் அத்துடன் நிற்கவில்லை. இரவில் யாராவது ஒரு ஜப்பானியன் வந்து பாரா குட்டிவிருந்து குதித்து அந்தப் படத்தை எடுத்துக் கொண்டு போய் விட்டால், அவர் தம் அல்லவா நேரும்! தன் வேலைக்கு ஆபத்து நேருவது ஒரு புறமிருக்க, ஜப்பான்காரன் அந்தப் படத்தை வைத்துக்கொண்டு, அதன் மூலம் இந்தியா இருக்கும் திசையை அறிந்து இங்கே படையெடுத்து வந்து விட்டால் என்ன செய்வது?

ஆகவே, அவர் இரவிலும் பள்ளிக்கூடத்துக்குப் போய் அந்த பீரோவருகே படுத்துத் தூங்கினார்.

இந்த மாதிரியாக இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன.

அடிக்கடி ஆசிரியர் அந்த பீரோவைத் திறந்து பார்ப்பார். அதில், தான் வைத்திருக்கும் இந்தியா தேசப் படம் இருப்பதைக் கண்டதும் அவருக்கு நிம்மதி உண்டாகும்.

ஒருநாள் மாலை, இன்ஸ்பெக்டர் வரப் போகிறார் என்பதாக திடீரென்று ஒரு செய்தி வந்தது.

உடனே மேஜை - நாற்காலிகளை யெல்லாம் இழுத்து ஒழுங்காகப் போடச் சொல்லிவிட்டு, ஆசிரியர் பீரோவைத் திறந்து அதிலுள்ள புத்தகங்கள் - படங்கள் எல்லாவற்றையும் துடைத்து வைத்துக் கொண்டே வந்தார். அப்படித் துடைத்து வைத்துக் கொண்டே வரும் போது, பயங்கரமான அந்த இந்திய தேசப் படத்தையும் எடுத்து மெதுவாக, பத்திரமாகத் துடைத்தார். அப்போது அந்தப் படத்தின் கீழே சின்னஞ்சிறிய எழுத்தில் ஏதோ எழுதப்பட்டிருந்தது அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. ஆசிரியர் குனிந்து வாசித்தார்.



"இந்தப் படம் ஜப்பானில் அச்சானது!" என்று எழுதியிருந்தது.

ஆசிரியர் அப்படியே நினைவு இழந்து தரையில் குப்புற விழுந்தார்.

**150 படங்கள் அடங்கிய அழகான பேஷன் (Fashion) புஸ்தகம். தையல்காரருக்கும் (Tailors) வீட்டிலேயே உடுப்புகளை தைக்கும் பெண்மணிகளுக்கும் பிரயோஜனமான அரிய புஸ்தகம் பம்பாயிலிருந்து தருவித்துள்ளோம்!**



இந்தியப் பெண்கள் அணியும் ஜாக்கெட் அநேக மாதிரிகளும், குழந்தைகள் சட்டைகளும், சிறு ஆண் பிள்ளைகளுடைய சூட் பேஷன்களும் கமிசைகளும், இந்திய கனவான்கள், பார்ஸிஸ், பெங்காலி, மதராஸ் கனவான்கள் அணியும் பேஷன்களும் இதில் காட்டப் பட்டுள்ளன. பெண்கள் சேலை அணியும் அநேக புது மோஸ்தர்களும், தலையை சிங்காரிக்கும் விதங்களும் அழகாய் காட்டப் பட்டுள்ளன.

**இதன் விலை ரூ. 1-12-0**

**தபால் கூலி அணா 4**

**வி. பி. பி கிடையாது.**

**ரூ. 2—0—0 மணியார்டர் அனுப்ப வேண்டியது**

## அற்புதமான பின்னலும் எம்பிராய்டரி வேலைகளும் அடங்கிய புஸ்தகங்கள்

**வீட்டில் பொழுது போகவில்லை என்று தவிக்கும் மாதர்கள் இந்த பின்னல் புஸ்தகங்களைப் பார்த்துவிட்டால் பொழுது போதவில்லையே என்று தவிப்பார்கள்.**

பல மாதங்கள் காத்திருந்தபின் இப்பொழுதுதான் பிரக்யாதி வாய்ந்த இந்தப் பின்னல் வேலை புத்தகப் பிரதிகள் சொற்பம் வந்துள்ளன. இதில் இங்குள்ள படத்தில் காணப்படுவது போன்றதும், வேறு 90 உருப்படிகளும் சித்தரிக்கப் பெற்றுள்ள கண்களைக் கவரத்தக்க பில்லட் ரேந்தை மாதிரிகள் அடங்கியுள்ளன. கதவுத் திரை, ஜன்னல் திரை, டீப்பாய் புடவை. மேஜை புடவை, புட்டுவச் சாய்மானப் புடவை, அகல ரேந்தைகள், குறுகிய ரேந்தைகள், எட்ஜிங் முதலியவற்றை பல்வேறு பூக்கள், பழங்கள், பட்சிகள், போர் வீரர், சம்பன்கள், மாதர் குழந்தைகள் முதலியன



உள்ளதாக பில்லட் ரேந்தை உருவங்களுடன் தயாரிக்கப்பட்டது விலை ரூ. 3-12-0 தபால் கூலி அணா 4 ரூ. 4-க்கு மணியார்டர் அனுப்புக. வி. பி. பி. கிடையாது.

**GONSAL STORES,** Great Cotton Road, *TUTICORIN*

Regd. No. M. 4392



# பெரீஸ் டோய்!!







## பெரீஸ் பிஸ்கட்ஸ்

குழந்தைகளுக்கு ஆரோக்கியமான உணவு

Manufactured by PERRY & CO., USILAMPATTI. S.India.

FAB-256